## ஆசிரியர் குழு

1. வித்துவான் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள்
ஸ்ரீ காசிமடம் இளவரசு, திருப்பனந்தாள்.
2. திரு. கே. சிவராமன் அவர்கள் M. A.,
சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்,
காசிச் சர்வகலாசாலை, காசி.
3. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L.,
பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.
4. ராவ்சாஹிப், வித்துவான். திரு. கு. அருணாசலக் கவுண்டர்
அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக்
கல்லூரி, திருநெல்வேலி.
5. திரு. பி. செந்தில்நாயகம் பிள்ளை அவர்கள் B. A.,
ஓய்வு பெற்ற மாவட்ட வருவாய் அதிகாரி, புளியங்குடி.
6. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.,
அசிஸ்ட்டண்டு கமிஷனர்.
H. R. & C. E. (Adm) Dept. Ramanad at Madura-2.
7. திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள் M. A.
தமிழ் விரிவுரையாளர், காசி இந்துப் பல்கலைக்கழகம், காசி.

T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.

## உள்ளுறை

பக்கம்

உ

சிவ சிவ

# அஷ்ட லக்ஷ்மீ திருவுருவங்கள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் அஷ்ட லக்ஷ்மிக் கட்டில் கூடத்தில் நடுப்பகுதியில் மேற் கூறையில் அஷ்ட லக்ஷ்மிகளின் சிற்பங்கள் வீற்றிருந்த திருக்கோலத்தில் அமைக்கப் பெற்றுள்ளன. சில இடங்களில் நின்ற திருக்கோலத்திலும் இருப்பது உண்டு. இங்குள்ள அஷ்ட லக்ஷ்மிகளின் உருவப் படங்களும், வடமொழியில் உள்ள தியான சுலோகங்களும், அவற்றின் தமிழுரையும் வரிசையாக வெளிப்படுத்தப் பெறுகின்றது. தியான சுலோகங்களினின்று சிற்பங்களில் கண்ட வேறுபாடுகளும் "குறிப்பு" என்ற தலைப்பில் தரப் பெற்றுள்ளது. அன்பர்கள் தியான சுலோகங்களைப் பயின்று திருவருள் பெறுவாராகுக.

# 1. ஆதிலக்ஷ்மீ

த்விபுஜாம் சத்விநேத்ராம்ச ஸாபயாம் வரதாந்விதாம்!
புஷ்பமாலாதராம் தேவீம் அம்புஜாஸன ஸம்ஸ்திதாம்!!
புஷ்பதோரண ஸம்யுக்தாம் ப்ரபாமண்டல மண்டிதாம்!
ஸர்வலக்ஷண ஸம்யுக்தாம் ஸர்வாபரண பூஷிதாம்!
பீதாம்பரதராம் தேவீம் மகுடே சாருபந்தனும்!
ஸ்தேனந்நதிஸபாயுக்தாம் பார்ச்வயோர்தீபசக்திகாம்!!
ஸௌந்தர்யநிலயாம் சக்தி மாதிலக்ஷ்மீ மஹம் பஜே!!

இரண்டு கைகளையுடையவளும், இரண்டு கண்களையுடையவளும், அபயம் வரதம் என்ற இரண்டு கைகளோடு கூடியவளும், பூமாலை அணிந்தவளும், தாமரை ஆஸநத்தில் வீற்றிருப்பவளும், பூக்களால் ஆகிய தோரணங்களோடு கூடியவளும், ஒளிமண்டலத்தினுல் அலங்கரிக்கப் பட்டவளும், எல்லா அழகோடு கூடியவளும், எல்லா அணிகளாலும் அலங்கரிக்கப் பட்டவளும், பீதாம்பரத்தை உடுத்திக் கொண்டவளும், கிரீடத்தில் அழகான கட்டையுடையவளும், இருபக்கத்திலும் தீபசக்திகளையுடையவளும், அழகான இருப்பிடத்தையுடையவளும் ஆன தேவியான ஆதிலக்ஷ்மியை நான் வணங்குகிறேன்.

மாறுதல் - குறிப்பு

1. வலது கையில் தாமரை
2. இடது கை வரதம்
3. உட்கார்ந்த முகூர்த்தம்.

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 17 || பராபவஞு ஆடித் திங்கள் 1ம்வ [17-7-66] || இதழ் 7

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்
## உரை நடை

பாலகவி வயிநாகரம்,
திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

(மலர் 17. இதழ் 6-ன் தொடர்ச்சி)

மதியும் நதியும் அரவும் விரவும்
மவுலி யொருவன் முக்கணும்
வனச முகமும் அகமும் மலர
மழலை யொழுகு சொற்சொலும்
புதல்வ விமய முதல்வி யருள்செய்
புனித வமரர் கொற்றவன்
புதல்வி தழுவு கொழுந குறவர்
சிறுமி குடிகொள் பொற்புய

கதிரும் மதியும் ஒளிர வொளிரும்
ஒளிய வளிய கற்பகக்
கனியின் இனிய வுருவ பருவ
மழையின் உதவு கைத்தல
முதிரும் அறிவில் அறிஞர் உணரும்
முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவு பருதி புரியின்
முருக தருக முத்தமே. 50

பிறைத் திங்களும் கங்கை யாறும் பாம்பும் பொருந்திய சடைமுடியை யுடைய ஒப்பற்ற சிவபெருமானது மூன்று கண்களும் தாமரை மலரை யொத்த திருமுகமும் திருவுள்ளமும் மலர்ச்சி அடையும்படி மழலை ஒழுகும் மொழிகளைப் பேசுகின்ற மைந்தனே! இமய மலைக்கு முதல்வியாகிய பார்வதிதேவி அருள் செய்து வழங்கிய தூயோனே! தேவர் தலைவனாகிய இந்திரனது புதல்வியான தெய்வ யானை தழுவுகின்ற கொழுநனே! குறவர் சிறுமியாகிய வள்ளியம்மை குடிகொண்டிருக்கின்ற அழகிய தோள்களையுடையவனே! சூரியனும் சந்திரனும் ஒளி தருவதற்கு மூலமாயிருந்து ஒளி செய்கின்ற ஒளி யுருவனே! தேன் நிறைந்த கற்பகக் கனியினது இனிமையான உருவத்தை உடையவனே! பருவ மழையைப்போல மெய்யன்பர்களுக்கு உதவுகின்ற கைத்தலங்களை உடையவனே! மெய்ஞ்ஞானிகள் முதிர்ந்த சிவ ஞானத்தினாலே உணருகின்ற முதற்பொருளே! முத்தம் தருவாயாக. முனிவர்கள் பரவுகின்ற பருதி புரியில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானே! முத்தம் தருவாயாக.

வடிவின் அழகும் எழுத வரிய
புயமும் நறிய செச்சையும்
மருமம் விரவு குரவும் அரையின்
மணியும் அணிகொள் கச்சையும்
கடவும் மயிலும் அயிலும் ஒழுகு
கருணை வதன பற்பமும்
கமல விழியும் விழியும் மனமும்
எழுதி யெழுதி நித்தலும்
அடிகள் எனவுன் அடிகள் பணியும்

அடியர் அலது மற்றும்வே
றமரர் குழுவும் அகில மறையும்
அரியும் அயனும் முற்றும்நின்
முடியும் அடியும் உணர வரிய
முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவு பருதி புரியின்
முருக தருக முத்தமே. 51

திருமேனியினது அழகும் எழுதுதற்கரியனவாகிய தோள்களும் மணம் மிக்க வெட்சி மலரும் மார்பிலே பொருந்திய குரா மலரும் அரையிற் கட்டிய சலங்கை மணியும் அழகுமிக்க அரைக் கச்சையும் ஊர்தியாகச் செலுத்துகின்ற மயிலும் வேற்படையும் அருள் ஒழுகுகின்ற திருமுகத்தில் நெற்றியில் விளங்குகின்ற விபூதியும் தாமரை மலரை யொத்த திருக்கண்களுமாகிய இவற்றைத் தமது கண்களிலும் மனத்திலும் நாள்தோறும் எழுதி எழுதிச் சுவாமிகள் என்று உனது திருவடிகளைப் பணிகின்ற அடியார்களல்லாமல் மற்றைத் தேவர் கூட்டமும் அனைத்து மறைகளும் திருமாலும் பிரமனும் முழுவதும் உனது திருமுடிகளும் திருவடிகளும் உணர அரியதாயிருக்கும் முதற் பொருளே! முத்தம் தருவாயாக. முனிவர்கள் பரவுகின்ற பருதி புரியில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானே! முத்தம் தருவாயாக.

---

(தொடரும்)

---

## சுந்தரர் அற்புதங்கள்

"வெங்க ராவுண்ட பிள்ளையை நல்குமே
வெள்ளை யானையின் மீதேறிச் செல்லுமே
மங்கை பாகனைத் தூது நடத்துமே
மருவியாறு வழிபட நிற்குமே
செங்க லானது தங்கம தாக்குமே
திகழும் ஆற்றிட்டுச் செம்பொன் எடுக்குமே
துங்க வான்பரி சேரற்கு நல்குமே
துய்ய நாவலூர்ச் சுந்தரர் பாடலே"

---

# புராண படனம்

தோன்றுதொட்டு நமது நாட்டிலுள்ள ஆலயங்களில் புராணபடனம் ஓர் விசேட நிகழ்ச்சியாக நிகழ்ந்து வந்தது. தற்காலத்தில் புராணங்களில் நம்பிக்கையற்றவர்களாய், புராண படனம் வீண் பொழுதுபோக்கு எனக்கொண்டு எல்லாரும் இதனைக் கைவிட்டுவிட்டனர். அன்றைய மக்களுக்கு இருந்த உடலுறுதியும் உளவுறுதியும் இன்றுள்ள மக்களுக்கு இல்லை. அவர்களிலும் பார்க்கத் தாங்கள் விவேகிகளெனத் தருக்கிப் பகுத்தறிவுக்கொவ்வாத கதைகளில் ஏன் வீண் காலம் போக்க வேண்டும் என்று கூறுகின்றனர். ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டம் என்பது போல் இவர்கள் அவசரப்பட்டு இம் முடிபுக்கு வருகின்றனர். ஆகவே ஈண்டு புராணம் எனில் என்னவென்றும் புராணபடனத்தின் பயன் என்னவென்றும் ஆராய்வாம்.

புராணம் என்பது வடசொல். இதற்குப் பழைமையும் புது மையும் உடையது என்பது பொருளாகும். வரலாற்றுக்கப்பாற் பட்ட காலங்களில் புராணங்கள் தோன்றின. ஆயினும் இன் றும் நின்று நிலவி உண்மை நாடி வாசிப்பவர்களுக்குச் சிறந்த பயன் அளித்து வருதலால் புதுமைக்கும் புதுமையாக இருக் கின்றன.

இவை, காலத்தாற் பழைமையுடையவையாயினும் கருத்தாற் பழையனவல்ல. புராணங்களுள் அரும்பெரும் தத்துவக் கருத் துக்களும் மனநீதிகளும், மலிந்திருக்கின்றன. உலக இன்பமே மெய்யென்று அதனுள் அழுந்தி நிற்கும் மந்ததர மந்த மதி யினரையும் உய்விக்கவேண்டி, நோய் தவிர்க்கும் மருந்தினை யருந்த உவர்த்து மனம் மறுகி நிற்குஞ் சிறுவர்க்கு அவர் விரும்பி உண்ணும் பால் தேன் ஆகிய மதுரவுணவுகளைக் காட்டிக்காட்டி அவற்றுடன் அம்மருந்தினையும் அருத்தித் தாயர், நோய் தவிர்த்தல்போல் அம் மந்தமதியோர் உகந்து நுகரும் அருந்தல் பொருந்தல் ஆகிய உலகபோக விடயங்களை இடை யிடையே வர்ணனைகளாக எடுத்தெடுத்துக் காட்டி

'சிவதொண்டன்' ஆசிரியர் அனுமதி பெற்று இந்த கட்டுரை பிரசுரிக் கப்படுகிறது.

அவற்றுடன் பிறவிநோய் நீக்கத்திற்குச் சாதகமான சமயா சாரம், தர்மம், நீதியாதியவற்றைப் பயக்குங் கதைகளை யுணர்த்தி இந்நெறியே அமைக்கப்பட்ட நூல்களே புராணங்கள். ஆகவே தர்க்க நெறிக்கு அடாதன ஆதியவும் வரப்பெறுவன வாம். கற்போரும் கேட்போரும் அவற்றை நீக்கிச் சமயாசார மாதியவற்றையே கைக்கொண்டு உய்யக்கடவர்.

"மந்தமார் புத்தியுடையராய் வல்லமாயையான் மூடிடப்பட்ட
பந்தரவாயி னருக்கனு குணமாகப் பகர்ந்த தேயன்றி மறந்தேனும்
சந்தமார்ந் துயர்ந்த பாரமார்த் திகமாச் சாற்றின தில்லையாலுணர்வீர்"

என்பதனுல் புராணவியல்பு அறியப்படும்.

இனி புத்தி விருத்தி பெற்ற இக்காலத்திலும் புராண பாரா யணம் வேண்டற்பாலதோவெனின் வேண்டியதேயாம். இக் காலப் புத்தி, விஞ்ஞானத்தில் விரிந்ததேயன்றி மெய்ஞ்ஞானத் திலும் சமய விடயங்களிலும் மந்தமாகவேயுள்ளது. ஒழுக்க நெறி மிகக் குன்றிய காலமும் இதுவே. ஆகவே ஏனை நாட் களிலும் இந்நாட்களிலேயே இப்புராணங்கள் படிக்கப்படுதல் மிகவும் வேண்டற்பாலதாகும். பாடசாலையில் குறித்தவோர் வகுப்பிலுள்ளோர் சித்தியடைந்து மேலேறிய பின்னரும், அவ் வகுப்பு நிலையம் பாழாகாமல் கீழ் வகுப்பில் நின்றோர் வந்து கற்றற் பொருட்டு நிரந்தரமாயிருப்பது போன்று, புராணபடன மும், முன்னர்ப் பாராயணம் செய்து உயர்ந்தோரொழியப் பின் வரும் அறிஞர் தத்துவப் பொருளுணர்ந்தும், மற்றையோர் சமயாசார மாதியவுணர்ந்தும் உய்தற்பொருட்டும் நற்பொழுது போக்குதற் பொருட்டும் ஆலயங்களில் இடையருது எல்லாக் காலங்களிலும் நிகழவேண்டியதாகும்.

இதனைப் பொறுமையோடு இருந்து அறியமுடியாதவர் களே வீண் வாதம் செப்பித்திரிவர்.

'புராண தத்துவம்' என்னும் பொருள் பற்றிக் "கலைமகள்" ஆசிரியர் வித்துவான் கி. வா. ஜகந்நாதன் ஆற்றிய ஓர் சொற் பொழிவை இங்கே கூறுவாம்.

சிலபொருள்கள் பழைமையாக இருந்தாலும் எல்லாக் காலத்தும் பயன் உடைமையினுல் புதுமையாகத் தோற்றுவது உண்டு. சூரியன் எப்பொழுது தோன்றினுன் என்று தெரியாது.

ஆனால் தினந்தோறும் காலையிலே உதயமாகி ஒவ்வொருநாளும் பயனளித்து வருகிறான்.

இறைவன் எப்போது தோன்றினான் எனச் சொல்ல முடியாது. அவனைக்காட்டிலும் பழையவன் வேறு யாருமே இல்லை. இருந்தாலும், எல்லாக் காலத்தும் வாழ்கின்ற மக்களுக்கு இன்ப நலன்கள் அளித்துக்கொண்டிருக்கிறான். புதுமைக்குப் புதுமையாக வருகின்றவற்றுக்குப் பின்னும் புதுமை உடையவனாய் இருக்கிறான்.

> "முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே
> பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே"

என மாணிக்கவாசகப் பெருமான் அருளினார்.

இறைவனைப் பற்றிய உண்மைகள் பூமிக்குக்கீழே ஓடும் வேர்போல இருக்கின்றன. வேரிலிருந்து மரம் வளர்ந்து நிற்கின்றது. மரத்தில் பூத்த மலர்களைப் போல புராணங்கள் இருக்கின்றன. அந்த மலர்களுக்கும் வேருக்கும் நேரான தொடர்பு இல்லை. ஆனால் வேர் இல்லாமல் மலர் இல்லை. வேரின் சாரம் மலராக மணக்கிறது. பல அரிய தத்துவங்களை வேராகக் கொண்ட நமது சமயத்தில் அத் தத்துவங்களிலிருந்து உரம்பெற்ற புராணங்கள் விரிவாக உள்ளன.

### நால்வகை நூல்கள்

மக்களின் வாழ்வுக்கு உறுதி அளிக்கும் பொருள்களை விளக்கும் நூல்களை நம் நாட்டுப் பெரியவர்கள் நான்கு வகைகளாகப் பகுத்தார்கள். பிரபு சம்மிதை, சுக்ருத் சம்மிதை, காந்தா சம்மிதை, சிசு சம்மிதை என்பன அவை. பிரபுசம்மிதையாவது தலைவனின் வாக்குப்போன்றது. சுக்ருத் சம்மிதையாவது நம்முடைய நண்பனாக இருந்து, இங்கிதம் தெரிந்து, காலத்திற்கு ஏற்ப, இடத்திற்கு ஏற்ப அறிவுரை கூறுவது போன்றது. காந்தா சம்மிதையாவது தங்களுடைய உள்ளத்திலே கொண்ட கருத்தை நேராகச் சொல்லாமல், அதற்கு நிலைக்களன் அமைத்து, இனிமை புலப்படும்படியாகச் சுற்றிச் சூழச்சொல்லும் மனைவியின் வார்த்தையைப் போன்றது. சிசு சம்மிதையாவது, கற்பனை நயங்களைக் கருத்தில் புகுத்தி, குழந்தைகளுக்குச் சொல்லும் கதைபோன்றது.

இந்த நான்குவகை நூல்களுக்குள்ளே பிரபு சம்மிதை வேதம். "இதைச்செய், இதைச் செய்யாதே" என்ருல், "ஏன்?" என்று கேட்கக் கூடாது. தலைவன் கட்டளையிட்டால், "நீங்கள் கட்டளை இட யார்?" என்று கேட்பதோ, "செய்ய மாட்டேன்" என்று மறுப்பதோ அடிமைக்கு அழகல்ல. வேதாகமங்கள் சொல்லியவற்றை அப்படியே நம்புவது மரபு. ஆதலிஞலே அவற்றைத் தலைவன் மொழி - பிரபு சம்மிதை என்று கூறினுர்கள். அது வித்தாக இருப்பது.

காலத்திற்கேற்ப, இடத்திற்கேற்ப, வித்தானது பரிணமிக்கும். பரிணமிக்கும் எந்த எந்தக் காலத்திலே, எந்த எந்த இடத்திலே பழக்க வழக்கங்கள், பண்பாடு முதலியவற்றுக்கு ஏற்ப, "இப்படிச் செய்யலாம், அப்படிச் செய்யலாம்" என்ற வழி முறைகளைச் சொல்வது "ஸ்மிருதி" என்று சொல்வார்கள். நண்பன் ஒருவன் காலமறிந்து, ஏவல் அறிந்து, பக்குவம் அறிந்து நமக்கு நன்மைகருதிச் சொல்லுவதைப்போல் ஸ்மிருதி சொல்லுவதால் அதை சுக்ருத் சம்மிதை என்பர்.

மனைவி கோயிலுக்குப் போய்விட்டு வீட்டுக்கு வருகிருள்; கணவனிடத்திலே பேசுகின்ருள். 'கோயிலுக்குப் போயிருந்தேன்; பிரகாரம் வலம் வந்தேன்; அங்கே ஓர் அம்மாள் வந்தாள் : மிகவும் அழகாக இருந்தாள்; நெற்றியிலே திருநீறு விளங்கியது; குங்குமம் இலங்கியது; தேவாரம் வாசித்துக் கொண்டிருந்தாள். என்னுடன் வந்திருந்த அடுத்த வீட்டுத் தோழி, 'அந்த அம்மாள் கட்டியிருக்கும் புடவையைப் பார்த்தாயா ? எவ்வளவு அழகாக இருக்கிறது ? அது உன் உடம்பில் இருந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும்' என்று என்னைப் பார்த்துச் சொன்னுள். 'அது கிடக்கட்டும்' என்று சொல்லிச் சுவாமி தரிசனம் செய்துவிட்டு வந்துவிட்டேன். இந்தாருங்கள் பிரசாதம்" என்று சொல்கிருள். அவளுடைய நோக்கம் என்ன ? புடவை தனக்கு வேண்டும் என்பது தான். "எனக்கு அந்தப் புடவையை வாங்கித்தாருங்கள்" என்று நேர்முகமாகக் கேட்டால் நயம் இல்லை என்று கருதி, இப்படித் தன்னுடைய கருத்தை அதற்கு ஏற்ற சூழ்நிலையை அமைத்து இங்கிதமாக, மிக இன்பமாகச் சொல்லத் தெரிந்தவள் மனையாள். அப்படி மக்களுக்கு உறுதி பயக்கும் கருத்தை உள்ளடக்கி, அதைச் சுற்றிச்

கூற, இங்கிதமாக, இன்பமாகச் சுவையுடன் சொல்வது காவியம். காவியத்தைக் காந்தா சம்மிதை என்பர்.

சிசுசம்மிதை என்பது நாம் குழந்தைகளுக்குக் கதை சொல்வது போல அமைந்த புராணங்கள். ஆங்கிலத்தில் (Parables) என்று சொல்லும் வகையைச் சேர்ந்தது இது.

**ஈசாப்புக் கதைகள்**

உலகம் போற்றக்கூடிய பெரிய எழுத்தாளர் ஈசாப் என்பவர். அவர் பல கட்டுக்கதைகளைக் குழந்தைகளுக்கு எழுதியிருக்கிறார். இன்றைக்கு அவற்றைச் சிறந்த குழந்தை இலக்கியம் என்று போற்றுகிறோம். தலை சிறந்த பேரறிஞர் என்று அவரைக் கொண்டாடி, அவர் கதைகளைப் பலர் தத்தம் மொழிகளிலே பெயர்த்து, குழந்தைகள் உலகத்துக்கும் பயன் படுத்துகிறார்கள். நம்முடைய பெரியவர்களும், அறிவு ஆராய்ச்சியாளர்களும், புராணங்களைப்பற்றிக் குறை சொல்லுகிறவர்களுங்கூட அக்கதைகளைப் படித்துவிட்டுப் பின் குறை சொல்லுவது இல்லை. ஓர் உதாரணம் சொல்கிறேன்.

ஒரு தவளை தாய்த் தவளை. அதற்கு ஒரு குழந்தை; குட்டி, தவளை ஆகிய இந்த இரண்டும் ஒரு குட்டையிலே வாழ்ந்துவந்தன. குட்டையில் ஊறிய மட்டைகளாக இருந்த அவை குட்டையே உலகம் என்றும், அதில் தங்களைத் தவிர யாருமில்லை என்றும் நினைத்துக் கொண்டிருந்தன. ஒருநாள் குட்டைக்கு ஒரு மாடு தண்ணீர் குடிக்க வந்தது. குட்டித் தவளை அந்த மாட்டைப் பார்த்தது. தான் வசித்த உலகமாகிய குட்டையிலே தன் அம்மாதான் மிகப் பெரியது என்று நினைத்துக்கொண்டிருந்த அந்தக் குட்டித் தவளைக்கு இந்தப் பெரிய உருவத்தைப் பார்த்தவுடனே பிரமிப்புத் தட்டியது. மாடு தண்ணீர் குடித்துவிட்டுப் போய்விட்டது. குட்டித்தவளை தன் தாய்த் தவளையிடம் சென்று, "இங்கே உன்னைவிட ஒரு பெரிய தவளை வந்தது" என்று சொல்லியது. தன்னையும்விட ஒரு பெரிய தவளை இருக்க முடியுமா என்ற நினைப்பில் அத் தாய்த்தவளை தன்னுடைய உடம்பைச் சற்றுப் பெரிதாக ஊதி, "இவ்வளவு பெரிது இருக்குமா?" என்று கேட்டது. "இதையும் விடப் பெரிது" என்றது குட்டித் தவளை. இன்னும் கொஞ்சம் ஊதிக்கொண்டு "இவ்வளவு

பெரிது இருக்குமா?'' எனத் திரும்பவும் கேட்டது. இப்படியே ஊதி ஊதிக் கடைசியில் ''படார்'' என்று வெடித்து விட்டது தாய்த்தவளை. தவளை எவ்வளவு உடலை உப்பினாலும் பசுமாடு ஆக முடியுமா ?

இந்தக் கதையைக் கர்நாடக முறையில் நம் இந்தியர்கள் சொல்லவில்லை; மேல்நாட்டினர் சொன்னார்கள். இந்தக் கதைக்கு வண்ணப்படங்கள் போட்டு நல்ல காகிதத்தில் அச்சிட்டு விற்கிறார்கள். நம்நாட்டு அறிவாளிகளும் கூட வாங்கிப் படிக்கிறார்கள். நான் கேட்கிறேன். ''தவளை பேசுமா ஐயா ? இது பகுத்தறிவுக்கு ஒத்த கதையா? இந்தக் கதையைக் குழந்தைக்குச் சொல்லலாமா ? குழந்தைகளால் இதை அறிந்து கொள்ள முடியுமா?'' இந்தக் கதைகளைப் பாராட்டுகிறவர்கள், நம் நாட்டுப் புராணக்கதையைச் சொன்னால் மாத்திரம் குருட்டு நம்பிக்கை என்று சொல்கிறார்கள். உலகம் எல்லாம் போற்றக் கூடிய அக்கதையைத் தவறு என்று சொன்னால் யாருமே ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஆகவே அதைத் தவறு என்று சொல்ல இவர்களுக்கு அச்சம். நம்முடைய புராணக் கதைகளைத் தவறு என்று சொன்னால், அப்படிச் சொல்லலாமா என்று கேட்பதற்கு ஆள் இல்லை.

**கதையும் கருத்தும்**

ஈசாப்புக்கதைகளை நன்கு அனுபவித்துப் பாராட்டும் அறிவைக் கொண்டு இவற்றைப் பார்த்தால் இவற்றினூடும் கருத்துக்கள் புதைந்திருப்பதைக் காணலாம். தவளை பேசவில்லை. மாடு பேசவில்லை. தன் நிலைக்கு மிஞ்சிய ஒருவனைப் போலத் தன்னைப் பாவித்து, தன்னுடைய நிலையில் நில்லாமல் அடக்கமின்றிப் பருத்தால் மோசம் வந்துவிடும். நிலையில் திரியாமல் அடங்கவேண்டியவன் நிலைக்கு மிஞ்சிப் பெருமை அடைய வேண்டுமென்று நினைத்தானானால், என்ன ஆகும் என்பதை அழகாக அக்கதை சொல்கிறது என்பதை அறிவாளிகள் ஒப்புக் கொள்கிறார்கள்.

குழந்தைகளுக்கு நீதி சொல்லவேண்டியது அவசியம். இத்தகைய கதையைக் குழந்தைகளின் உள்ளத்திலே பதித்து வைத்தால், பிற்பாடு வருங்காலத்திலே அவற்றின் நியதிகள்

அவர்களது வாழ்க்கைக்குத் துணை புரியும் என்கிற கருத்தி லேயே அக்கதைகள் உருவாகின. இந்தக் கதைகளைச் சொல்லு கிறபோது, தவளை பேசுமா? மாடு பேசுமா? என்பன போன்ற கேள்விகளைக் குழந்தைகள் கேட்பதில்லை; ஆனால், மேடை ஏறிப் பேசுகின்றவர்கள் கேட்கிறார்கள். உலகிலுள்ள எல்லா நாடு களிலும் இத்தகைய கற்பனைக் கதைகளை மனிதனுடைய உள்ள வளர்ச்சிக்குப் பயன்படும் என்று கருதிச் சொல்கிறார்கள். அப் படிச் செய்வது நன்மையானால், புராணக்கதையை மாத்திரம் தவறு என்று சொல்வதற்கு என்ன நியாயம் இருக்கிறது?

அந்தக் கதைகளுக்கு மூலமாக உள்ள கருத்து, கட்டுக் கதை அல்ல. அதைச் சொல்பவன் தன்னுடைய கற்பனையையும் சிறிது சிறிதாகச் சேர்த்து எங்கெங்கே அழகாகச் சொல்லியிருக் கிறான் என்று நாம் பார்க்க வேண்டும்.

மூல மூர்த்தியும் உற்சவ மூர்த்தியும்

கடையிலே சரக்கு இருப்பது தெரிந்த ஒருவன் அங்கே சென்று சரக்கை வாங்கிக்கொள்கிறான். அதைப்போல, ஆல யத்துக்குத் தானே சென்று மூலமூர்த்தியை வழிபட்டு, இன்ப நலம் உய்க்கிறான் பக்தன். ஆலயத்திற்குச் செல்லாதவர்களும் இருக்கிறார்கள் அல்லவா? கடைக்கு வராதவர்களுக்கு ஒரு கூடையிலே பண்டங்களைக் கொண்டுபோய் அவர்களை வாங்கும் படி கூடைக்காரி செய்வதில்லையா? அவர்கள் உள்ளத்தைக் கவருகின்ற வகையில் விளம்பரப்படுத்துவதற்காக நல்லவற்றை வைக்கிறாள் கூடைக்காரி. அப்படியே கோயிலில் இருக்கின்ற ஆண்டவனாகிய மூலமூர்த்தி, தன்னை நாடி வருகின்ற பக்தர் களுக்கு இங்கு இருந்துகொண்டே இன்பம் கொடுக்கிறான். ஆல யத்திற்கு வராதவர்களுக்காகத் தானே அவர்களுடைய வாயி லைத்தேடிச் சென்று அவர்கள் மனத்தைக் கவருகிறான். தன்னை நோக்கி, தன்னுடைய வாயிலுக்கு வராதவனிடம் போனால் எப்படிப் போகவேண்டும். அலங்காரத்துடன் செல்லவேண்டும்.

"நையாத உளத்தினரை நைவிப்பான் இத்தெருவே
ஐயாநீ உலாப்போந்த அன்று முதல்."

என்பது திருவிசைப்பாவில் ஒரு பாட்டு. நைந்த உள்ளம் உடைய வர்கள் மூலமூர்த்தி இருக்கும் இடம் தேடிச்சென்று உய்கிறார்கள்,

நையாத உள்ளத்தினர் தம் இருப்பிடம் தேடி வரவில்லையே என ஆண்டவன் எண்ணுமல் அவர்கள் இருக்குமிடம் தேடி உற்சவ மூர்த்தியாக கைகால்களை எல்லாம் கட்டிக்கொண்டு, மாலைகளை அணிந்து கொண்டு, அலங்காரமூர்த்தியாக நாயனங்கள் முழங்க, அபிநய நடனங்கள் முன்செல்ல வீதிவலம் வந்து, அவர்கள் உள்ளத்தையும் நையவைக்கிருன். ஆண்டவன் அலங்காரத்தோடு தன்னுடைய வீட்டு வாசலுக்கு முன்னுலே வந்து நிற்கும்போது, காது உடையவன் ஆதலால், நாதசுரத்தைக் கேட்டு வீதிக்கு வருகிருன். கண்ணும் உடையவன் ஆதலாலே ஆண்டவன் திருமேனியை அலங்கரிக்கும் மாலைகளையும் ஆபரணங்களையும் பார்க்கிருன். வாய் உடையவன் ஆதலாலே, "யார் அது, என்ன"? என்று கேட்கிருன். வீட்டு வாசலிலே நிற்கும் ஆண்டவனுடைய விசேஷங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கேட்டு அறிந்துகொள்கிருன். உற்சவரைப் பார்த்து விட்டு உள்ளே போனவனுக்குப் பயன் இல்லை. உற்சவரால் உள்ளம் கவரப்பெற்று, மூலமூர்த்தியை நாடி ஆலயத்துக்குப் போய் அவன் பயன் பெறுகிருன். அவனை இப்படி வலியவந்து தான் ஆட்கொள்ளவேண்டும் என்ற பெருங்கருணையினுலே மூல மூர்த்தியாக ஆலயத்தில் உள்ளளவன், விசேஷ அலங்காரத் தோடு உற்சவ மூர்த்தியாக வெளிவருகிருன். வெளிவருகின்ற உற்சவருக்குக் கட்டப்பட்டிருக்கும் கை கால் எல்லாம் பொய் தான் என்ருலும் மூலம் பொய்யா? கை கால்களைக் கட்டிக் கொண்டு அலங்காரத்தோடு வெளிவருகின்ற தோற்றம் தானே நையாத உள்ளத்தையும் நைய வைக்கின்றது?

**உள்ளம் கவர**

இப்படியே புராணங்களின் மூலம் உண்மை. ஆனுல் அறிவில் குழந்தைகளாக இருக்கின்ற பெரியவர்களின் உள்ளத்தையும் கவர்ந்து உண்மைக் கருத்திலே அவர்கள் மனம் ஈடுபடக் கூடிய வகையில் அலங்காரமாக, சுவை மிக்கனவாகப் புராணங்கள் சித்தரிக்கப்படுகின்றன: அவற்றின் அழகினைப் பார்த்து, நயத்தைப் பார்த்து, வியப்போடு நின்ருல் பயன் இல்லை. வீதி வலம் வருகின்ற உற்சவரின் அழகைக் கண்டு உள்ளம் நைந்து, மூலமூர்த்தியைச் சென்று தரிசித்துப் பயன்

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க.)

# அட்டாங்க யோகம்

தேவார இசைமணி,
திரு. எஸ். சங்கரநாராயணன் அவர்கள்.

---

திருமுறைகள் பன்னிரண்டில் பத்தாவது திருமுறையாகத் திகழ்வது தமிழ் மூவாயிரம் என்ற திருமந்திரம் ஆகும். திருமூலரது திருமந்திரத்திலே மூன்ரும் தந்திரத்தின் முதல் பகுதி அட்டாங்க யோகம். திருமந்திரத்திலுள்ள மூவாயிரம் பாடல்களில் யோகத்தைப்பற்றி விளக்க 335 பாடல்கள் இருக்கின்றன. அட்டாங்க யோகம் நான்கு பாடல்களால் விளக்கப்படுகிறது. யோகாசனப் பயிற்சிக்கு இன்றியமையாத இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம் முதலியனவும் பின்னர் பேசப்படுகின்றன. திருமூலர், யாவருக்கும் நன்கு விளங்க மிக அழகான பாடல்களில் தன் கருத்தைச் சொல்கிருர். யோகநிலையை அடைய விரும்புகின்றவர்கள் கடைப்பிடிக்கவேண்டிய நெறிகளையெல்லாம் விளக்குகிருர்.

---

(முன் பக்கத் தொடர்ச்சி.)

பெறுவது போல, புராணக்கதைகளால் உள்ளம் கவரப்பெற்றவன் அதன் மூலத்தையும் பார்த்துப் பயன்பெறுவான். மக்களில் உடம்பால் குழந்தைகளாக இல்லாவிட்டாலும் அறிவினுலே குழந்தைகளாக இருப்பவர்கள் பலர். அக் குழந்தைகள் எத்தனையோ செய்திகளை இன்னும் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கின்றன. யாரைத் தெரிந்து கொள்ள வேண்டுமோ, அவரைத் தெரிந்து கொள்ளாமல், தெரிந்து கொள்ள வேண்டாதவர்களை எல்லாம் தெரிந்து கொண்டு வாழ்கிருேம். குழந்தைகளான நாம் யாரைத் தெரிந்து கொள்ள வேண்டுமோ அவரைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக நாம் வாழ்கின்ற உலகத்திற்கேற்பவே நம் உள்ளத்தைக் கவருகிற வகையில், புராணங்களைக் கற்பனை நயத்தோடு அமைத்திருக்கிருர்கள். (தொடரும்)

"கொல்லான்பொய் கூருன் களவிலான் எண்குணன்
நல்லான் அடக்கம் உடையான் நடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கள்காமம்
இல்லான் இயமத் திடையில் நின்ருனே"

என்கின்ருர் திருமூலர். யோகத்திலே பயிற்சிபெற வேண்டுமென்று கருதுகின்றவன் இந்த வகையான நெறிகளையெல்லாம் நாம் உடையவனுக இருக்கின்ருேமா என்று முதலிலே சிந்தித்துப் பார்க்கவேண்டும். குறைபாடு இருக்குமாஞல் அவன் யோகத்திற்குத் தகுதி உடையவன் ஆகான். இந்நெறிகளைக் கொண்டு பார்த்தால் இன்று யோகிகள் என்று சொல்லுகிறவர்களிலே எவ்வளவு பேர் தேறுவார்கள் என்று நீங்களே முடிவு செய்து கொள்ளலாம். தீயனவற்றை விடுதலே இயமம் ஆகும், நல்லனவற்றைக் கொள்வது நியமம் ஆகும். எது நியமம் என்று திருமூலர் சொல்லுகிருர்:—

"தவம்செபம் சந்தோடம் ஆத்திகம் தானம்
சிவன்தன் விரதமே சித்தாந்தக் கேள்வி
மகம்சிவ பூசையொண் மதிசொல்லீர் ஐந்து
நிவம்பல செய்யின் நியமத்தன் ஆமே".

இந்த நல்ல கொள்கைகளை உடையவன் நியமத்தில் நிற்பவன் என்று சொல்லுகிருர். பிராணுயாமத்திலே இப்பொழுது ஈடுபடாதவர் இல்லை. பெரும்பாலோர் பிராணுயாமம் செய்கிருர்கள். அது செய்யாதவர் சைவர் அல்லர். பிறமதத்தவர்களும் பிராணுயாமம் செய்வதை நாம் பார்க்கிருேம். பிராணுயாமத்தின் அடிப்படையை நினைந்து பார்த்தால் அவ்வளவும் சிந்திக்க வேண்டிய இடத்திலேதான் இருக்கிறது. பிராணுயாமம் என்பதை எடுத்துச் சொல்லுகின்ற போது திருமூலர் மிகவும் அழகாக ஒருபாடலில் கூறுகிருர்:—

"ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்
உய்யக்கொண் டேறும் குதிரைமற் ருென்றுண்டு
மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்கும் கொடாதுபோய்ப்
பொய்யரைத் துள்ளி விழுத்திடும் தானே."

அதாவது குதிரையில் ஏறும்போது அடங்காத குதிரையாக இருந்தால் ஏறியவனை அதுகீழே தள்ளிவிடும். அடங்கி

விட்டாலோ அது அவன் செலுத்துகிற வழியே நடக்கும். இந்த உவமையை வைத்துக்கொண்டு பார்த்தால் ஐம்புலன்களையும் அடக்க வல்ல குதிரைதான் பிராணுயாமம்; அதனை அடக்கி விட்டவனே ஐம்புலன்களையும் வென்றவன். அடங்காதவர்களுக்கு இப்பிராணுயாமம் கெடுதியை விளைவித்து விடும் என்று அழகாகக் குறிப்பிடுகிருர். நாமோ நமக்குள்ள புலன்களின் வழியே நாம் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறேம். ஆனல் ஞானிகளோ புலன்களை விட்டவர்கள் அல்லர்; ஐம்புலன்களையும் அடக்கி அதனைத் தன் வழியே செலுத்துகின்றவர்கள். நாம் செல்லுகிற வழி அவர்கள் செல்லுகிற வழி ஆகிய இரண்டுக்கும் இதுதான் வேறுபாடு. ஐம்புலன்களை அடக்கித் தன் வழியில் கொணர்ந்தவர்களே ஞானிகள். சேக்கிழார் சுவாமிகள் திருநீலகண்ட நாயனுரை,

"வென்ற ஐம்புலனுல் மிக்கீர்"

என்று சிறப்பித்துச் சொல்வதைப் பார்க்கலாம். ஐம்புலன்களையும் அடக்கப்பிராணுயாமந்தான் இன்றியமையாதது. மூச்சை ஏற்றி இறக்கிப்பிராணுயாமம் செய்யப்படுகிறது. மூக்கை கையினல் தொடுவது, எடுப்பது என்பது பிராணுயாமம் ஆகாது. காற்றை உள்ளே அடக்கிவிடும் காலசம்ஹாரம் தெரிந்து செய்கிறவர்களுக்குத்தான் யமனை உதைக்கும் கருவியாகப் பிராணுயாமம் இருக்கும். நமது மூச்சுக் காற்றைக் கட்டுதலே பிராணுயாமம். மூச்சை அடக்கினல் மனமும் அடங்கும். அதனை மாறி மாறிப் பாய்ச்சினல் மன ஒருமைப்பாடு உண்டாகும். பிராணுயாமத்தைப்பற்றி நம் சிவஞான சுவாமிகள் குறிப்பிடுகின்றபோது யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம் என நான்கு வகையாகப் பிரித்துக் கொண்டு, இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம் என்னும் நான்கும் யோகத்தில் சரியை என்றும், பிரத்தியாகாரமும் தாரணையும் யோகத்தில் கிரியை என்றும், தியானம் யோகத்தில் யோகம் என்றும், சமாதி யோகத்தில் ஞானம் என்றும் குறித்துக் காட்டினர்கள். பிரத்தியாகாரம் தாரணை என்று சொல்லப்படுகிற இரண்டும் எங்கெங்கோ செல்லுகிற மனத்தை அங்கங்கெல்லாம் செல்லவிடாது தடுத்து ஒருமுகப் படுத்தலே ஆகும். புலன்களை

அவ்வவற்றுக்கு உரிய செயல்களைப் புரியாது தடுத்து, மனத்தை ஒருவழிப் படுத்தலே பிராணுயாமம் உதவுகிறது.

"கோணு மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணுத்தண் டூடே வெளியுறத் தாஞேக்கிக்
காணுக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணுள் அடைக்கும் வழியது வாமே"

என்கிறுர் திருமூலர். திருப்பெருந்துறையிலே முனிபுங்கவர்கள், காணுக் கண் அதாவது பொருள்களைப் பார்த்தும் பார்க்காத விழித்த கண்ணுடையவர்களாகவும் கேட்பதற்கு உரிய செவி இருந்தும் கேளாத் தன்மை உடையவர்களாகவும் இருந்தார்கள் என்று கூறப்படுகிறது.

நமக்கெல்லாம் யோகத்தைப் பற்றிக்கூறுகின்ற திருமூலரும் சிறந்த சிவயோகி ஆவார். அவரே தன்னைப்பற்றிச் சொல்லியிருக்கிறுர்:—

" இருந்தேன் இக்காயத்தே எண்ணிலிகோடி"

என்பதாக. எண்ணுயிரம் ஆண்டு வாழ்ந்தார் நமது திருமூல தேவர். இப்படிப் பல காலம் தியானத்திலிருந்து அது முற்றி, அதே சமாதியாக ஆகும் போது அற்கு மேலே ஒருபடி: அதாவது அறிவினுலே அறிய முடியாத — அறிந்தாலும் பிறருக்கு எடுத்துக் காட்ட முடியாத ஞானம் வந்துசேரும்; பயில்வார்களுக்கு முற்றின பகுதியாக வருவது ஞானம். ஆன்மா, மலம் நீங்கி யோகத்திலே அடங்கி ஆசாரியர்கள் காட்டுகிற நன்னெறியிலே நின்று, இறைவன் திருவடிப் பேற்றையே நினைந்து தியானித்தால் அதனுல் சமாதி ஞானம் உண்டாகும். அந்த ஞானம் பெறுவதற்கேற்ற சிறந்ததொரு வாய்ப்பை, நம்மைவிட அறிவிலே உயர்ந்து, உலகியல் வாழ்விலே சிக்குருது நல்ல முறையிலே சிறந்த சிவநெறி வாழ்க்கையை நடத்திக் காட்டி வருகின்ற ஒருவராலேதான் அளிக்கமுடியும் என்ற குறிப்பை நமக்குக் காட்டுகிறுர். நம்மிடமுள்ள தியனவற்றை எல்லாம் விட்டு, நல்லனவற்றைக் கொண்டு, பிராணுயாமத்தில் மனம் அடங்கிவிடலாம். மனத்தின் இயல்பு சும்மாய் இராது. அடங்கிய மனத்திலே வேறெரு பொருளை அடக்கி, அந்த மனமும்

அடக்கிய பொருளும் ஒரே நிலையை அடையப் பயிற்சி வேண்டும் என மிக அழகாகத் திருமந்திரத்தில் எண்பத்து மூன்று பாடல்களால் விளக்கப்படுவதைப் பார்க்கலாம். அந்த முறை யிலே இந்த மூன்ருந்தந்திரத்திலுள்ள இருபத்தொரு தலைப்புக் களும், பொருள் வகையில் சேர்த்துப் பார்த்தால் ஒன்பது பகுதிக் குள்ளே அடங்கும். அட்டாங்க யோகத்தை ஆண்டவன் திரு வருள்பெற்ற பெரியவர்கள் மிக எளிய முறையிலே திருவாய் மலர்ந்தருளி இருக்கின்ருர்கள். அதனை நாம் கடைப்பிடித்து ஒழுகுவதற்குக் குருமூர்த்தியின் திருவடியைப் பற்றிக்கொள் வது இன்றியமையாத கடமை என்பதைத் திருமூலரே தெரிவித் துள்ளார்.

நம்மனோர்க்குக் கிடைத்துள்ள செந்தமிழ் ஞான நூல்களுள் திருமூலர் திருமந்திரம் ஒன்றே பழைமையும், புகழும் வாய்ந்தது. திருமந்திரம் ஆகமசாரம்; முதலில் ஆகமங்கள் ஒன்பது வகை யாகப் பிரிக்கப்பட்டு, பின் அவற்றிலிருந்து இருபத்தெட்டு ஆகமங்கள் விரிந்துதோன்ற லாயின என்பது,

"ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு"

என்னும் திருமூலர் திருமொழியினுல் நன்கு விளங்குகின்றது. திருமந்திரம் உயரிய மந்திரநூல். இத்தன்மை சிறப்புப் பெற்ற பாடல்களைப் பயின்றுப் பயனுறுவார்களாக!

"அந்நெறி இந்நெறி என்னாது அட்டாங்கத்து
அன்னெறி சென்று சமாதியிலே நின்மின்
நன்னெறி செல்வார்க்கு ஞானத்தில் ஏகலாம்
புன்னெறி யாகத்திற் போக்கில்லை யாகுமே"

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே.

வணக்கம்.

# THE SAINT WHO BUILT A TEMPLE OUT OF HIS MIND.



**Professor E. S. Varadaruja Iyer.**

—ooOoo—

In Tirunindravur, famous for its Vedic Chants and Brahmins noted for their excellent conduct, there was a Brahmin who was well read in the four Vedas and the Agamas. His thought was always on the twin feet of Siva and he gave freely of his earnings to the devotees of Lord Siva. He once thought of erecting a shrine for Siva, but being unable to find the necessaries for construction, resolved to build one by his own imagination. He collected all requisite materials by mere thought. He planned to have a Sirpi or Architect by mere thought and fixed an auspicious day for commencing the work. The foundation was laid according to the Agamas, and the construction was undertaken night and day. He planned everything from the basement to the Vimanam. He planted the Stupi, completed the cement work, dug the temple well, constructed the walls, excavated the tank, everything out of his pure imagination and the day for installing the Lord, approached.

While this work was in progress, the Pallava King planned to erect a stone temple in Kanchi for Siva and endow it with immense wealth. But just on the eve of the consecration ceremony of the Sanctum Sanctorium, the Lord with the cassia wreath appeared before the king in his dream and addressed him as follows:—

'Oh King! I will first visit the big shrine that has been built for me by Poosalar of Tirunindravur. Hence try to put off the consecration ceremony of your temple by a day.' So saying the Lord vanished.

The valiant king said to himself that he should see the Saint who has accomplished this mighty task and bow before him and reached Tirunindravur, which was surrounded by shady groves. On reaching the place, he asked the people there, where the temple was, that was constructed by Poosalar. They replied that they know nothing of such a shrine built in that place. The king thereon asked all the Brahmins to assemble. When he asked them who that Poosalar was, the Vedic seers told him that he was no doubt, a native of that place. The king, shrewd as he was, did not send for the Saint, but on the other hand hurried to that place where he stayed and bowed to him. He then asked him to show him the shrine he had built for Siva, adding that he was there to witness the consecration ceremony at the bidding of Siva. The devotee was struck with wonder on hearing the above words and considering the immense grace of the Lord even for his insignificant self, told the king that the temple he constructed was purely a product of his imagination as he was too poor to command the necessaries for a concrete construction. The king who was astonished at the earnest dovotee of Poosalar, prostrated before him and repaired to his capital with all his paraphernalia. The Saint Poosalar installed the Lord in the temple, worshipped it for a good number of years and ultimately attained the perfect conscious bliss at the feet of the cosmic dancer of the Golden Hall.

---

# வழிகாட்டி

திருமதி. அனந்தலக்ஷ்மி சுப்ரமணியம் அவர்கள், M.A.,
5, விநாயகமுதலி தெரு, சென்னை–1.



இருள் கவிந்த காடு. கல்லும் முள்ளும் நெருஞ்சியும் படர்ந்து கிடக்கின்றன. அங்காங்கே மல்லியும் முல்லையும் மணம் பரப்பி வருபவரை வரவேற்கின்றன. மனிதக் கூட்டம் ஒன்று இக்காட்டு வழி இடையருது நடந்து செல்கின்றது. ஒருவரையொருவர் அறியாது இருளில் மோதிக் கொண்டு தட்டுத் தடுமாறி செல்கின்றனர். ஒருவன் தான் செய்த பெருந் தவத்தால் ஒளிக் கற்றையைக் காண்கிருன். அதன் வழிச் சென்ருல், அவன் துன்பங்கட்கோர் முடிவு ஏற்பட்டு நற்கதி அடையலாம் என்று உணர்கிருன். மற்றவரையும் தன்னுடன் வரும்படி அழைக்கின்ருன். ஒரு சிலர்க்கு மட்டும் அவன்பால் நம்பிக்கை ஏற்படுகிறது. ஆனுல் மற்றவரை விட்டுவிட்டு அவனைத் தொடர தைரியம் இல்லை. மற்றவர்க்கோ தங்கள் மேல் கொண்ட எல்லையில்லாத அசைக்க முடியாத நம்பிக்கையில் அவன்பால் நம்பிக்கை ஏற்படவில்லை. இனி அவன் தன் நல்வழியே உயர்வழி என உறுதி பூண்டு அதன்படி நடக்கத் தொடங்குகிருன். இப்படிப்பட்ட நிலைமைதான் எல்லா உயிர்களின் நிலைமையும். பிறப்பிலே பாசத்தாலும் பந்தத்தாலும் கட்டுண்ட உயிர்கள் இறைவனை மறந்து விடுகின்றன. ஊனக் கண்ணில் ஒளிபாய, அறிவுக் கண் மூடிவிடுகின்றது. ஆனுல், ஒரு சில உயிர்கள், இறைவனுல் அருளப்பட்ட உயிர்கள், அவன் அருளால் அவன் தாள் வணங்கும் உயிர்கள் மற்ற உயிர்களையும் தன்னைப்போல், ஒளிக்கற்றையைத் தன் வழிகாட்டியாகக் கொண்டு நடக்க விரும்புகின்றன. மற்றவர்கள் நடக்காவிட்டாலும் தாங்கள் நடக்கமுயல்கின்றன. இத்தகைய பெரும்

பேறுடைய உயிர்களை நடமாடும் தெய்வங்களாக இவ்வுலகில் காண்கிறோம். அத்தகு உயர் தெய்வங்கள், மறைந்தாலும் நம் உள்ளத்தினின்று மறையாது வாழும் கற்பனை உலகில் நட மாடும் பேருயிர்கள் எத்தனை எத்தனை! புழுதியும் சேறும் படிந்து, குடரால் பிணைக்கப்பட்ட இம்மனித வாழ்க்கையை வாழக்கூடாத படி வாழ்ந்தாலும், இவற்றுள் தன்னுடலை அழித்தாலும் சுடச் சுட ஒளிரும் பொன்போல் மாற்றி ஒளிசிந்தி நிற்கும் உயர் உள்ளங்கள் எத்தனை? எத்தனை? இத்தகு உயர் பாத்திரங்களை நமக்களிக்கும் பெருமக்களுள் கம்பனை விஞ்சினரும் உண்டோ? வேடர் கூட்டத்தில் உயர் குகனைப் படைத்தான். யாரினும் தாழினமாம் குரக்கினத்தில் அன்புடை அனுமனும் தோன்றி னன். வாழக் கூடாத வாழ்க்கை – யாவரும் கனவிலும் அஞ்சும் வாழ்க்கை, அரக்கர் வாழும் வாழ்க்கை அவ்வுலகில் ஒரு விபீ டணனைப் படைத்து அன்புள்ளம் அளித்து இறைவனுக்கோர் அடியானாக்கினன்.

இவர்கள் யாவரையும் தன் தம்பியராகக் கொண்டான் இராமன். என்றுமே இறைவன் தன் அடியார்க்கு அடியானா வான். உற்ற நண்பனுவான்; உயர் தலைவனும் ஆவான்; இப் படிப்பட்டவனின் அருள் நோக்கால் உயராத நெஞ்சம் ஏது? மற்றவரைத் தன் உற்றவராகக் கொண்டமையும் பெரிதன்று; ஆனால் தனக்கெதிராக நின்றவன் ஒருவனின் தன் துன்பத்திற் கேக் காரணமானவனின் தம்பியைத் தன் உம்பியாகக் கொண் டமை அவன் சால்பினையேக் காட்டும். இராமனால் விபீடணன் ஏற்றம் பெற்றான். அவன் பால் சார்ந்து பிணைத்து இழுத்த குலப் பாவமும், அழிவும் அவனை விட்டு வெகுதூரம் போய் விட்டன. அன்று அரக்கனானவன் இன்று மனிதனாகின்றான்; அடியானாகின்றான்; அவனைப் பற்றித்தான் இங்கு காண்போம்.

குப்பையிலே மாணிக்கம் ஒளிரவில்லையா? இருளில் நாகத் தின் மணி பிரகாசிக்கவில்லையா? கலங்கிய நீரில் தண்மதியின் பிம்பமும் விழுவதில்லையா? அதுபோலத்தான், புறத்தில் ஒளி பொருந்தியிருந்தாலும் அக இருளில் வழி தெரியாது தடுமாறிக் கொண்டு இருக்கின்றன ஆணவத்தில் அழுந்தின உயிர்கள். அந்த இருட்டறையில் மக்கள் உய்ய, ஒரு ஒளி உண்டாக, பல

அடியார்களைப் பிறப்பிக்கின்றான். இப்படித் தோன்றினவன் தான் விபீடணன். அவன் குலம் அன்பிற்கும் பாசத்திற்கும் விலை கூறும் குலம். தருமமும் நியாயமும் அறியாத ஒருவனைத் தலைவனாகக் கொண்ட குலம். இப்படிப்பட்ட குலத்தில் தான், குலத்திற்கோர் உயர் விளக்காய் அருள் ஒளியாய் அன்பிற்கும் தருமத்திற்கும் இருப்பிடமாய் விபீடணன் தோன்றினான்.

முதன் முதலில் விபீடணனை யுத்த காண்டத்தில் அறிமுகப் படுத்துகிறார். அவன் தன் தமையன் என்று உடன் பிறப்பால் இணைக்கப்பட்ட இராவணனுக்கு நல்லுரை பகன்று அவனை வாழச் செய்யும் பெரும் பொறுப்பை ஏற்றவன். முதன் முதல் அவன் சொற்றிறம் படைத்த வாய்ச்சொற்கள் அவனைப்பற்றி அறிய வழி வகுத்தனர். இடித்துரைப்பார் இன்றி வாழும் மன்னன் கெடுப்பாரின்றி கெடுவான். இதனை விபீடணன் நன்கு உணர்ந்திருந்தான். அதனால் தான், கேட்பார் பிணிக்கும் தகையவாய் இனிய சொற்களால் நயந்து உரைக்கின்றான். தருமமும் நீதியும் இதுவென பறைசாற்றுகிறான். இரணியன் என்னும் அரக்கன் அழிந்தமைக்கும் அவன் பேராசையே வித்தாக நிற்கும் என்று விளக்கிக் காட்டுகிறான்.

இவன், பெருந்தன்மையை அறிய அவன் சொற்றிறனே வழிகாட்டி. அவன் அறவுரை கூறும்போது சீதையைப் பற்றியும் கூறுகின்றான். ஆனால் அவன், அவளுடைய புறஅழகைப் பற்றி ஒன்றுமே கூறுவதேயில்லை. காமத்தீயில் வெந்தழியும் இராவணனுக்குக் கூறுவதெல்லாம், சீதையின் கற்பின் பெருமையையும், பொறையின் வலியையும் தான். எவ்வலிக்கு அஞ்சாவிடினும் அவ்வலிக்காவது அஞ்சும்படி தன் தமையனை வேண்டுகிறான்.

இவன், இங்கு அணுவணுவாய்ச் சிதைந்தழியும் தன் தமையனுக்கு அறிவுரை பகன்ற போது, விதுரனைப் போல்தான் காட்சியளிக்கிறான். பாண்டவர்பால் பொருமையுற்று கேவலம், குழந்தை போல் பெண்பிள்ளை போல் குமுறித் தவிக்கும் துரியோதனனின் கலங்கிய மனதைத் தெளிவிக்கப் பெரு முயற்சி செய்தான். சகுனியுடன் சூதில் சேர்ந்தாடி, திரௌ

பதியை நடுச் சபைதனில் கொண்டு நிறுத்திய மானக் கேடான செயலைக் கண்டு விதுரன் கொந்தளித்து எழுகிறான். அவன்,

"பிள்ளைத் தவளை பெரும் பாம்பை மோதுதல் போல்
ஐவர் சினத்தின் அழலை வளர்க்கின்றாய்"

என்று அவர்களுக்கு தன்னிலை உணராது செய்யும் அவக் கேட்டை உணர்த்துகிறான். இஃதொடு இன்றி "தெய்வத் தவத்தியைச் சீர் குலையப் பேசுகின்றாய்" என்று அவன் முறை தவறிய வாழ்க்கையை எடுத்துக்காட்டி, "பேராசை கொண்டு பல பிழைச் செயல்கள் செய்கின்றீர்; மாவிபத்து வந்துவிடும்" என்று வருபவனவற்றைக் காட்டி உண்மை நிலையை விளக்கி அவன் உய்ய வழிகாட்டினான்.

அவனுள் ஒரு படி விஞ்சிவிட்டான் விபீடணன். அவன் அரக்கர் குலத்தில் பிறந்து விட்டாலும் தருமம் ஒன்றைச் செய் வதைத் தன் கடன் என்று கொண்டான். நீதிக்கும் தருமத் திற்கும் முன்னால் பாசத்திற்கும் உறவுக்கும் இடமில்லை என் பதை நன்கு உணர்ந்து கொண்டான். தன்னால் இயன்ற அளவு விதுரன் போல், விபிடணனும் அறவுரை பகன்றான். இராம பிரானின் ஈகையால் வினைகளை வென்று மேல் வீடு கண்டவர் உண்டன்றி தேவரை வென்றார் இவ்வையகத்தில் கிடையாதென விளக்குகிறான். இதுமட்டுமல்லாது பொன்னாசை, மண்ணாசை, பெண்ணாசை இவற்றில் முதலிரண்டும் மனிதனை என்றுமே ஆட்டிப்படைக்கின்றன. அப்படிப்பட்ட மனிதன் மூன்றாவது ஆசையையும் கொண்டால் அவன் அரக்கனாகிறான். அவன் அழிவை அவனேத் தேடிக் கொள்கிறான். இராவணன் இதற்கு விதிவிலக்காக நில்லாமல் இருப்பதை உணர்ந்து விபீடணன் தீர்க்கதரிசி போல் திட்டமாகக் கூறுகிறான்.

"மீனுடை நெடுங்கடல் இலங்கை வேந்து என்பான்
தானுடை நெடுந்தவம் தளர்ந்து சாய்வதோர்
மானுட மடந்தையால்" [இராவணன் மந்திரப்படலம்]

என்ற வாக்கைக் கூறி அவன் நிலைகாட்டினான். இதற்கெல் லாம் இராவணன் அஞ்சி அலமந்து நிற்கவில்லை. இதற்கு மேலும் விபீடணன் நயந்து,

"இன்னம் ஒன்று உரைசெய்கேன்; இனிதுகேள் எம்பிரானிருவர்ஆய
.... .... .... .... .... .... .... .... .... ....
.... .... .... .... .... .... .... .... .... ....
கன்மம் அன்று, இதுநமக்குறுதி என்று உணர்தலும் கருமம் என்றால்"
[இராவணன் மந்திரப்படலம்]

என்று விளக்கினன். அதுவும் பயனிலை. அதெல்லாம் கற்பாறையில் விழுந்த மழைத்துளியென மாறிவிட்டது. மழைத்துளி எவ்விடத்திலும் ஒன்றாகத்தான் விழுகிறது. பாறையில் விழும்போது காய்ந்து விடுகிறது. முத்துச் சிப்பியில் விழும்போது அழகான முத்தாக மிளிர்கிறது. ஏங்கி நிற்கும் சாகசப் பறவைக்கோ உயிராக மாறிவிடுகிறது. அப்படித்தான் மனித உள்ளமும். எதையும் ஏற்கப் பக்குவம் அடைந்து இருக்க வேண்டும். விபீடணன், இராவணனை விட எவ்வளவோ இளையானாக இருந்த காலத்தில் அறிவில் முதிர்ச்சி அடைந்து இருந்தான். அதனால் தருமத்திற்குத் தலை வணங்கினன். "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்றிருந்து, பாசம் பந்தம் இவற்றை உதறிவிட்டு சற்று முன் வரை பகைவன் என்று கருதப்பட்டவனிடம் சரணடைந்தான். அந்தத் திண்மையால் தான் அவ்வளவு விரைவில் இறைவனைச் சரணடைந்து உடன்பிறவாத் தம்பியாகி ஏவல் புரிந்து போர் முடிந்தபின் இலங்கைக்கோர் கோனாக முடிந்தது. இதுதான் இவ்வுத்தமனின் வாழ்க்கை.

நறவும் ஊனும் மாந்தி ஐம்புலன்களின் இன்பமே பெரிதெனத் துய்த்த குலம் அரக்கர் குணம். என்றுமே பிறர் பொருட்டு வாழ்ந்து அவர் நலம் தன்னலம் என்று வாழ்வது இறைவனின் திருக்குணம். என்றுமே, மனிதனின் – ஒவ்வொரு உயிரினுள்ளும் அரக்க குணம் இருக்கிறது. தெய்வ குணமும் இருக்கிறது. ஒவ்வொரு மனிதனின் எண்ணங்களிலும் செயலிலும் இராமனும் வாழ்கின்றான், இராவணனும் வாழ்கின்றான். என்றுமே மனிதன் உள்ளத்தில் இராமனுக்கும் இராவணனுக்கும் இடையறாப் போராட்டம். விபீடணன் தன்னுள் இராமன் வாழ வழிவகுத்தான். தன்னுள் முளைத்த இராவணனை அழித்துவிட்டு, எவ்வழி நல்வழியோ அவ்வழியே தன்வழியாகக் கொண்டுத் தனியாக நடக்கின்றான்,

தன் தமயனுகிய கும்பகர்ணனையும் தன் வழிப்படுத்த முயன்ருன். ஆனல் அவன் கர்மவீரன். செஞ்சோற்றுக் கடன் தீர்ப்பதேத் தன் கடன் என்றறிந்தான். இராமாயணத்தில் விதுரன் விபீடணன் என்ருல் கர்ணன், கும்பகர்ணன் தான். நீர்க்கோல வாழ்வை நஞ்சி நெடிதுநாள் வளர்த்துப் பின்னே, போர்க்கோலம் செய்து விட்டார்க்கு உயிர்கொடாது இருத்தல் இழிபு என உணர்ந்தவன். எவன் தனக்கு அளிக்கப் பட்ட தொழிலே நடத்துகிருனே அவன் செய்யும் செயலெல்லாம் இறைவனுக்குரியதாம் என்பது உணர்ந்து வாழ்ந்தான் அந்தக் கர்மயோகி.

அவன் சித்தப்படிதான் எச்செயலும். இது மறக்க முடி யாத உண்மை. விபீடணனே உய்வித்து தன் அடியானுக்க விரும்பினுன். அவனும் வாழ்ந்தான். கும்பகர்ணனுக்கு வீர மரணம் அளித்து உலகில் உயர் வீரனுக்க விழைந்தான். அவ னும் அப்பேறு பெற்ருன்.

இவ்வுண்மையை மறந்தார் ஒரு சிலர். மிகச் சிலர் விபீ டணன் தன் தமயனுக்குத் துன்பம் ஏற்பட்ட காலத்தில் உத வாது தன்னேத்தான் காத்துக் கொண்டமை முறையா? என்று வினுவை எழுப்புவர். போர்முறை கொண்டு நோக்கின் – இவ் வுலக வாழ்க்கையைக் கொண்டு நோக்கின், அது தவறுடைத் தாம். விபீடணன் செய்கை உலக இயலுக்கு அப்பாற்பட்ட செய்கை. ஆனல், உயிர்களின் ஆன்மிக வாழ்க்கைக்கோர் வழிகாட்டி. அவன் இராவணன் போல் இல்லாது தன்னுயிர் தன்னுடைமை தன் கடன் இவற்றையெல்லாம் தனதாக்கிக் கொள்ளும் நம் பெருமானிடம் சேருவதையேத் தன் கடனுகக் கொண்டான்.

இராமபிரானிடம் அடைக்கலம் புகுந்தவுடன், "ஏழினேடு ஏழாய் நின்ற உலகமும் ... ... தாழ் கடல் இலங்கைச் செல்வம் நினது" என்று இராமன் மகுடம் சூட்ட எண்ணிய காலத்தில், அவன் தான் வேண்டுவது இறைவனின் திருவடியே என்று விளக்குகிருன்.

(தொடர்ச்சி 358-ஆம் பக்கம் பார்க்க)

# திருமுறைகள் காட்டும் தொண்டு நெறி

வித்துவான், நடேச நாராயணன் அவர்கள்,
துணைச்செயலாளர்,
செங்கை மாவட்டத் தமிழ் எழுத்தாளர் சங்கம்.

## கவியரங்கப் பாடல்

திருக்கழுக்குன்றத்தில் 1965 ஜுலை 1, 2, 3, 4, ஆகிய தேதிகளில் சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தினர் நடத்திய திருமுறை இன்னிசைப் பெருவிழாவில் 4–7–65 அன்று மதுரை ஆதீனம் ஸ்ரீ–ல–ஸ்ரீ மகாசந்நிதானம் சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் தலைமையிலும் காஞ்சிபுரம் ஸ்ரீ–ல–ஸ்ரீ ஞானப் பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் அருள் முன்னிலையிலும் நடந்த திருமுறைப் பேரவையின் கவியரங்கில் பாடப்பட்ட பாடல்கள். (இருபத்தொரு பாடல்கள் கொண்டது).

தொண்டருளம் வீற்றருளும் தொன்மைப் பரம்பொருளே
தெண்டனிட்டேன் நின்னடியே தேர்ந்து. 1

அருளுடைய கவியரங்கத் தனித்தலைவ ரேறே!
அவைசார்ந்த சான்றோரே! பெரியோரே! நன்றும்
பொருளுடைய செல்வர்களே! அன்புறுதாய் மாரே!
பொலிவுடைய இளைஞர்களே! நனிவணக்கம், ஈண்டுத்
“திருமுறைகள் காட்டுகின்ற தொண்டுநெறி” பற்றிச்
செப்பிடுவேன் கவியாலே செவிசாய்ப்பீர் நன்றே
தெருளுடையீர்! தெருளடையா அடியேனின் பாட்டில்
சிறுமையுறு குறைநீக்கி நிறைகொள்வீர் மன்னே! 2

அருமறையின் உயிர்ப்பனைத்தும் இலங்குவதோ டன்றி
அற்புதத்தின் அருட்பாடல் மிகப்பலவாய்ப் பெற்ற
திருமுறைகள் உரைக்கின்ற செந்நெறிகள் தம்முள்
திருத்தொண்டு நெறியொன்றே திகழ்வார்ந்த தென்றே

ஒருமுறையே கற்றவரும் உணர்ந்திடுவர் என்றால்
உங்களிடை யதன்சிறப்பை உரைத்திடுதல் நன்றோ?
பெருமைமிகீர்! என்றாலும் மீண்டும்யான் சொல்வேன்
பிரியமுடன் கேட்டிடுவீர் வாழ்த்திடுவீர் என்னை. 3

சைவத்து நாயன்மார் அறுபத்து மூவர்
சரிதையுரை பெரியபுரா ணத்தின்நற் பேரே
தெய்வத்துத் திருத்தொண்டர் புராணமெனச் சொன்னால்
திகழ்கின்ற தொண்டுநெறிக்(கு) இருக்கின்ற கீர்த்தி
மெய்வைத்த கீர்த்தியெனிற் குறைசிறிதும் உண்டோ?
மேதினியில் தொண்டொன்றே நாயன்மா ராகச்
செய்வித்த(து) அடியாரை என்றறிந்த பின்னும்
செப்பிடவோ திருத்தொண்டின் சீர்த்திதனை இங்கே. 4

தொண்டென்ற பேராலே சுயநலத்தைப் பேணும்
தொற்றுநோய்த் தியாகிகளும் தொல்லுலகில் உண்டு
தொண்டென்றால் ஒழுக்கமிலாத் தீயர்களைச் சுட்டும்
சொல்வழக்குக் கொங்குநாட்டில் பயில்கின்ற தென்றால்
தொண்டர்களாம் இவர்களையே நினைவினிலே வைத்துச்
சொல்வதுவோ? யாமறியோம் சூழ்ந்தெண்ணிப் பாரீர்
தொண்டென்றால் இறைவர்க்கும் உயிர்கட்கும் செய்யும்
தூய்மைமிகு சேவைகளே என்றுணர்வீர் நன்றே. 5

அழைப்புக்கும் ஆணைக்கும் பிறகே சென்றங்(கு)
ஆற்றுகிற செயலெல்லாம் வாழ்வில் நாளும்
பிழைப்புக்குச் செய்கின்ற செயலே யன்றிப்
பிறங்குகிற தொண்டாமோ? தாமே முன்வந்(து)
உழைத்தன்பால் விருப்போடு செய்யுந் தொண்டே
உண்மையிலே தொண்டாகும் இதனை யோர்ந்தால்
தழைத்தோங்கும் திருமுறையால் காணுந் தொண்டே
சத்தியமாய்த் தொண்டுகளில் சிறந்த தொண்டாம். 6

பொதுநலத்துச் சிந்தையராய்ப்
பொழிகின்ற அன்பினராய்ப்
பொலிந்து நாளும்

மதுநிலைத்த மலரடியோன்
மகிழ்ந்துறையும் திருக்கோயில்
மலர வேண்டி
புதுநலத்துச் செயலாற்றின்
புண்ணியநற் றெண்டாகும்
புவியோர் என்றும்
இதுநிலைத்த தொண்டென்றே
இயம்பிடுவர் இதில்ஐயம்
இல்லை இல்லை. 7

பேச்சாலே செய்கின்ற தொண்டுகளும் உண்டு
பேசாமல் எழுத்தாலே தொண்டுசெயல் உண்டு
மூச்சாலே உடலுழைத்துச் செயுந்தொண்டும் உண்டு
முத்தொண்டில் செயல் தொண்டே முதன்மையுடைத் [தாகும்
பேச்சாலும் எழுத்தாலும் செயலாலும் தொண்டு
பெற்றியுடன் செய்தவரோ நாயன்மார் ஆவர்
வீச்சாலே பரவுபுகழ் மேவியவித் தொண்டர்
வீடெய்தி ஞர்எண்ணில் தொண்டாலே யன்றே? 8

தூண்டிலினுல் மீன்பிடிப்பர்; உச்சியுள காயைத்
துறட்டாலே அறுத்திடுவர் அஃதேபோல் காக்கும்
ஆண்டவனைத் தொண்டுநெறி யொன்றுலே ஈர்த்தல்
ஆகும்எனும் உண்மையினைத் திருமுறைகள் செப்பும்
மாண்புடையீர் எல்லோரும் தொண்டுநெறி பற்றி
மாநிலத்தே உயர்ந்திடுவோம் மகிழ்ந்திதற்கே நந்தம்
ஆண்டவனும் அருள்புரிவான் ஐயமிதில் வேண்டா
ஆருயிர்க்குச் செயுந்தொண்டே ஆண்டவர்க்கு மாமே! 9

சுந்தரர்தாம் மணங்கொண்ட நேரத்தில் நேரில்
தோன்றியநம் இறையவனுர் குறுக்கிட்டு, "நீர்தாம்
எந்தமக்கே அடிமை;இதில் ஐயமொன்றும் இல்லை
எழுந்துடனே வந்திடுவீர் தொண்டுசெய்வீர்" என்றே
பந்தமுடன் உரைத்(து)அவரைத் தடுத்தாட்கொண் டன்றே
பணிபுரியச் செய்தவர்தாம் எம்பெருமான் என்றுல்
சிந்தனைசேர் அன்பர்களே! தெரிந்தெண்ணிப் பாரீர்
சிறப்பான தொண்டுநெறிக் கீடொன்றும் உண்டோ? 10

"காலனுெத்த முதலைவாய்ப் பிள்ளைதனை மீட்டுக்
களிப்புறவே பெற்றோர்க்குக் கொடுத்திட்ட பின்பே
ஆலமுண்ட அவிநாசிப் பெம்மானைப் போற்றி
ஆசிபெறுவேன்" என்ற சுந்தரரின் வாக்கால்
ஞாலமெலாம் காக்கின்ற நம்பனையே போற்றி
நாளெல்லாம் தொழுவதினும் நல்லுயிர்க்குத் தொண்டு
சீலமுடன் செய்திடலே சிறப்பாகும் என்ற
சீர்மையுறு செய்தியினைத் தெளிந்திடுவீர் நன்றே. 11

படமாடும் கோயிற் பரமற்குப் பக்தி பதிவதினும்
நடமாடும் ஜீவர்க்கு நன்ருகும் தொண்டை நடத்திடலே
தடமாடும் வாழ்வைத் தகுவாழ்வா யாக்கும் தனிச்செயலாம்
இடமாடும் வைப்பில் இதுபோற்றி வாழின் இசைமிகுமே. 12

தொண்டால் இறைவன் துணையைப் பெறலாம் சுடருலகில்
விண்டால் அறுபத்து மூவர் இதுபோல் விழுப்பணியால்
கொண்டார் புகழினை! நாயன்மார் என்றே கொளலவரைத்
தொண்டால் விளைந்த பயனும் எனவே துணிந்திடுவீர். 13

பார்புகழ் நாயன் மார்கள்
பக்தராய் இருந்தும் இங்குத்
தேர்ந்திடு தொண்டை நாளும்
சிறப்புடன் செய்த தாலே
சீர்மிகு சேக்கிழார் நூல்
திருத்தொண்டர் புராணம் என்றே
பேர்பெறும் சீர்த்தி கண்டோம்
பெருமைதான் தொண்டுக் கன்றே? 14

'தொண்டலால் துணையும் இல்லான்
தூயநம் ஈசன்' என்று
விண்டவர் அப்பர் என்றல்
வியன்மிகு தொண்டுக்(கு) ஈடிங்(கு)
உண்டெனிற் சொல்வீர் நந்தம்
உயர்திரு முறைகள் எல்லாம்
கண்டதோ தொண்டே யாகும்
கருத்தினில் ஏற்பீர் நன்றே! 15

நங்க டம்பனை என்ற பாட்டினில்
நாய னூரவர் அன்புடன்
'எங்க டன்உனைத் தொழுதுகிடத்த' லென்(று)
இசைத்திலார்; 'பணி செய்வதே
எங்க டன்'எனச் செப்பினூர் எனில்
ஏற்ற தொண்டதன் பெற்றியை
உங்கள் சிந்தையில் எண்ணித் தேறுவீர்
உண்மை நாடிடும் அன்பர்காள். 16

புலன்களினுல் தொண்டுசெயின் உள்ளமதும் ஒன்றும்
புரிந்திதனை மேற்கொள்ளின் பயன்பெறுவர் நன்றே
'நிலைபெறுமா(று) எண்ணுதியேல் நெஞ்சே'என் ருேதும்
நிகரற்ற அப்பரது தேவாரப் பாட்டால்
அலைபாயும் நெஞ்சத்தை அடக்கிடலாம் என்ற
அனுபவத்தை அறிந்திடுவீர், அன்புடையீர், நந்தம்
தலைமுதலாத் தாள்வரையில் தொண்டுணர்வே மேவத்
தக்கபணி செய்திடுவீர் சத்தியத்தில் நின்றே. 17

வீசுபுகழ் நாயன்மார் வாழ்வெல்லாம் தொண்டால்
விளங்கியநல் வாழ்வென்றே வரலாறு காட்டும்
'ஆசிலறச் சாலைகளும்' நீர்ப்பந்தல் தானும்
அமைத்ததுடன் காவளர்த்தும் குளந்தொட்டும் செய்த
மாசில்லா நற்செயலும் அப்பரவர் நாளும்
மாண்புமிகு உழவாரப் படைதன்னை ஏந்தித்
தேசுறவே செய்தசெயல் எல்லாமும் இங்குச்
சிறப்புற்ற தொண்டன்ருே? தேர்ந்தெண்ணிப் பாரீர்! 18

அரித்தெடுத்த முயலகனை அழித்தொழித்தே வாழ்வை
அரிவைக்(கு)அன்(று) அளித்ததுவும் அருட்தொண்டே
விரித்தபடத்(து) அர(வு)அதனுல் உயிரிழந்தான் தன்னை [யன்ருே
வியப்புறுமா(று) எழுப்பியதும் வியன்தொண்டே யன்ருே?
எரித்தெடுத்த எலும்பினையும் எழில்மிக்க பெண்ணுய்
எழுப்பியதும் தொண்டன்ருே? முதலைவாய் தன்னுள்
மரித்தொழித்த மகனையுமே உயிரோடு தந்த
மாட்சிமிகு தொண்டினையும் மறந்திடுவார் யாரே? 19

விரித்துரைத்த இத்தகைய தொண்டுகளை நந்தம்
மேன்மையுறு திருமுறைகள் வியந்தோதிற் றென்றல்
உரித்தான நெறிகளிலே தொண்டுநெறி யொன்றே
உயர்வான நெறியென்றல் மறுத்திடுவார் உண்டோ?
அரித்தான இத்தொண்டால் வீடடைந்தார் என்றல்
அறிவிப்ப(து) அழகில்லை அதன்சிறப்பை மேலும்
சிரித்தமுகத்(து) அறிவுடையீர் சிந்திப்பீர் என்றன்
சிற்றறிவுக்(கு) எட்டியதைச் செப்பிவிட்டேன் இங்கே. 20

திருமுறைகள் காட்டுவது தொண்டுநெறி என்றே
தெளிவாக இதுகாறும் அறிந்துணர்ந்தோம் நன்றே
பெருநெறியாம் இந்நெறியைப் பிரியமுடன் கொள்வீர்
பேசரிய பயன்தருவ(து) இந்நெறியே யாகும்
அருமைமிகு கடவுட்குத் தொண்டுசெய்வ தன்றி
அகிலத்தின் உயிர்கட்கும் அகமுவந்து செய்வோம்
ஒருமையுடன் இதுகாறும் கேட்டவர்க்கே நன்றி
உரைக்கின்றேன்; வணக்கமுடன் முடிக்கின்றேன் வாழி.21

---

(முன் 352-ஆம் பக்கத்தொடர்ச்சி)

"அளவறு பெருமைச் செல்வம் அளித்தனை ஆயின்ஐய!
களவியல் அரக்கன் பின்னே தோன்றிய கடைமைதீர
.... .... .... .... .... ... .... .... கவித்தி"

என்ற இந்தச் சொற்கள், பொருளும் போகமும் துய்க்கப் பகைவன் பால் சேர்ந்தான் என்று மயங்கிக் கூறுவார்க்கு ஒரு சிறந்த விளக்கமாகும்.

இவன் இறைவன் அடிசேர்ந்தது இவன் செயலன்று. எல்லாம் அவனருளால்தான். இந்த அருள் யார் கையிலும் இல்லை. ஆட்டுவிப்பவன் அவன் என்றல் ஆடவேண்டுபவர் நாம்தானே; இறைவனின் அருள் நோக்கால் குப்பையில் மாணிக்கம் தோன்றலாம், சேற்றில் செந்தாமரை மலர்ந்து சிரிக்கலாம். அரக்கர் குலத்தில் ஒரு மனிதனும் தோன்றலாம். அந்த மனிதனே, மெய்யறிவு கைவரப் பெற்றபின்பு ஒரு தெய்வமாக மாறிவிடலாம். இத்தகைய உன்னதக் கருத்தை நம் மனதில் பதித்து நமக்கோர் உத்தம வழிகாட்டியாக இருக்கிறான் கம்பன் அளித்த விபீடணன்.

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## திருப்பூவல்லி

இனித் திருப்பூவல்லியாவன:— முற்பதிகத்திற் கதையை யழித்துப் பொருள் சொன்ன சத்துக்கள் மேற்செய்யுமுறைமை வினவில், சிவார்ச்சனையன்றி வேறில்லை நிட்டை, எனக்கருதி பூக் கொய்தலைக் காரண காரியமாக வுபசரித்தலான அநுபூதி.

திருவடி வைத்தலுமே வேறுள்ளப் பற்று அற்றமையால் அதையே துதித்தல் வழக்கென்றதும், விஷய வின்பத்தை விரும்பினது போலப் பேரானந்த வின்பம் பெற்றதும், ஆண்ட முறைமையும், பிறப்பிறப்பு மாயைக்கன்றி, இன்பத்துக்கில்லை யென்னு முறைமையும், பெற்று மறந்தவர்களுக்கு நிக்கிரகம் வரும் முறைமையும், சிவதரிசனம் உள்ளன்றி வெளியிலன்று என்னு முறைமையும், திரிபுரம் அழித்தல் மும்மலந்தீர்த்த லென்னு முறைமையும், தேகாதி பிரபஞ்சங் கொடுத்தது பேரின் பத்துக் கென்னும் முறைமையும், சிவானந்தம் பெற அடியார் இனத்தாரெனு முறைமையும், விளக்கம் தோன்றுதலெல்லாந் திருவடியே யென்னும் முறைமையும், திருவடி வைத்தவுடன் நீங்கினது ஆசையாகிய உடலென்னு முறைமையும், பேரின்பமே திருமேனியென்னு முறைமையும், துன்பம் போலத் தோன்றி இன்பமே வடிவாம் முறைமையும், விதிப்படி அர்ச்சித்தலே

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை—திருவான்மியூர், மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத் தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 18/- ஷை நூல் நிலையத்தில் கிடைக்கும், 20% கழிவு உண்டு.

முறையென்னு முறைமையும், சிவபோதத்தில் நடனஞ் செய்யும் முறைமையும், நிக்கிரகங்களெல்லாமனுக்கிரக மென்னலும், அடியார்க்கெளிவரு முறைமையும், உபாங்கமெல்லாம் அருளென்னும் முறைமையும், சிவானந்தமே நடனமென்னு முறைமையும், சுத்தான்மாக்களுக்குமகவாய் வருமுறையுந், திருப்பா முறைமை யெனக் காண்க.

இப்பா கலிவிருத்தமாகத் திருத்தில்லையில் ஓதியதெனக் காண்க

இனி, திருவடி வைத்த வின்பத் (தி. – ன.):—

இணையார் திருவடி யென்றலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்க ளெத்தனையுந் துறந்தொழிந்தேன்
அணையார் புனற்றில்லை யம்பலத்தே யாடுகின்ற
புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ.

(இ - ள்). சத்திசிவ சொருப பாவ, பராபரஞான, இரண்டு பொற்பாத கமலங்களையும் எனது அறிவான உச்சியின்மேல் சூடியவுடன் எனக்குத் துணை போலிருந்து உசாவிக்கெடுத்த மாயா தத்துவ பிரதிபந்த மெல்லாம் சருவ சங்க நிவிர்த்தி யானேமடி! ஞானப் பெண்களே! கேட்பீராக! சிறை சூழ்ந்த நீரால் விளங்கிய திருவம்பலத்திலே நடனஞ் செய்யுங் குஞ்சித பாதத் தெப்பமான புகழைப்பாடி, மலர் கொய்வாம் ஞானப் பெண்களே! – என அருளியதைக் காண்க.

---

## சேக்கிழார் துதி

தொகையா நாவ லூராளி
தொடுத்த திருத்தொண் டப்பெருமை
வகையால் விளங்க உயர்நம்பி
யாண்டார் வகுப்ப மற்றதனைத்
தகையா அன்பின் விரித்துலகோர்
தம்மை அடிமைத் திறப்பாட்டின்
உகையா நின்ற சேக்கிழான்
ஒளிர்பொற் கமலத் தாழ்பணிவாம்.

# இமயக்குரல்

திரு. வி, கலியாணசுந்தரம் அவர்கள்,
ஏஜண்ட், ஸ்ரீ குமாரசாமி மடம்,
காசி.

பனியோ பனி!

நடைபாதை எங்கும் பனி! எதிரே காணும் மலை எங்கும் பனி! மந்தாகினி ஆறும் பனியால் மூடிக்கிடக்கிறது! வீட்டைச் சுற்றிலும் பனி! கூரை மேலும் பனியே! வீட்டுக்குள் சென்றதும் தடால்! தடால்! என்று சப்தம் கேட்டுத் திடுக்கிட்டுப் பார்த்தோம். பனிக்கட்டி உருகி வீட்டுக் கூரையிலிருந்து கீழே தடால்! தடால்! என்று விழுந்து கொண்டிருந்தன. இப்பனிக் குவியலுக்குள் காட்சி அளிப்பது தான் திருக்கேதாரத் தலம். எதிரே தெரிவதுதான் திருக்கேதாரநாதர் கோயில். அக்கோயில னருகில் ஒரு சிறு குடிலில் தங்கியிருப்பவர்தான் பலஹாரி பாபா. ஓரிரு தினங்கள் தங்குவதற்குள் நாம் எத்துணை துன்புறு கிறோம்? யாத்திரீகர் செல்ல இயலாத ஆறு மாதகாலத்திலும் மனித வாடையே இல்லாமல் தன்னந்தனியே இருந்து தவமியற்றும் பாபாவின் சாதனையை என்னென்று கூறுவது? அந்த ஞானியின் தரிசனம், அவருடைய அருள் மொழிகள், கேட்கும் பேறு எத்தனையோ ஜன்மங்களில் செய்த புண்ணிய வசத்தாலன்றி எளிதில் கிடைக்குமா?

குடிசைக் கோயில்.

திருக்கேதாரநாதர் கோயிலின் அருகில் தென்மேற்கு பாகத்தில் உள்ள சின்னஞ் சிறு குடிலின் வாயினுள் குனிந்து சென்றால் எதிரே ஒரு துனி எரிந்து கொண்டிருக்கும். அதன் நடுவே ஒரு திரி சூலம் காணப்பெறும். அதன் எதிரில் வடக்கு நோக்கி அமர்ந்திருக்கிறார் பாபா. 75 அல்லது 80 வயது மதிக்கு

லாம். (இங்குள்ளவர்கள் நூறு வயதுக்குமேல் கூறுகிறுர்கள்) மெல்லிய சரீரம். நடுத்தர உயரம். முன் பற்கள் விழுந்து விட்டன வாயினும் மற்ற பற்கள் நன்கு உள்ளன. ஒரு பனியன் அணிந்து அதன் மேலே ஒரு கம்பளிப் போர்வையுடன் எந்தச் சமயம் சென்ருலும், அந்த ஆசனத்தில் அமர்ந்த படியே காட்சி அளிக்கிருர். அவருடைய சுழலும் விழிகள், அந்த ஞானக் கண்கள், நம் மனத்தை ஈர்த்து விடுகின்றன. பேசும் தெய்வ மாக காட்சி அளிக்கிருர் பாபாஜி.

தன்னந்தனியே !

12-5-66உ குரு வாரம். மாலே 5 மணி சுமாருக்கு திருக் கேதாரத்தை அடைந்தோம். வழி நடந்த களேப்பு மிகுதி. அத்துடன் வழி நெடுக, பனியில் நடந்து வந்ததால் கால்கள் மறத்து தாங்கவொண்ணுத உபாதியை உண்டாக்கி விட்டது. காலில் நெய்யை சூடு செய்து தேய்த்து அக்னியில் காய்ச்சினேம். வெளியே பனி பெய்து கொண்டிருந்தது. மனித நடமாட்டமே இல்லே. எல்லோரும் சிறிது தேநீர் அருந்தி களேப்பாறினேம். எனக்கு மேலும் அங்கிருக்க மனம் இடந்தரவில்லே. கால்கள் நடக்க மறப்பினும் மெதுவாக நடந்து வெளியே வந்தேன். பாபாவின் குடிலே நோக்கி நடந்தேன். பாதை தெரியவில்லே. பனிக்குவியலில் கால்கள் புதைந்து கல்லில் அடிபட்டு வேதனே ஏற்படுத்தியது. ஏதோ ஒரு விதமாக சமாளித்துக்கொண்டு அவர் குடிலே அடைந்து விட்டேன். பாபா தனியே ஆசனத் தமர்ந்திருந்தார்.

கிட்டாதன கிட்டிற்று.

எத்தனேயோ முறை அந்த குடிலுக்குள் சென்று வந்திருக் கிறேன். ஒவ்வொரு ஆண்டும் திருக்கேதாரம் செல்லும் போது குறைந்தது இரண்டு மூன்று தடவையாவது பாபாவை தரிசிக்கத் தவறமாட்டேன். ஆனுல் அவரைத் தனியே காண் பது துர்லபம். யாராவது வந்து கொண்டே இருப்பார்கள். இம் முறை அவரை தனியே தரிசிக்கவும், வெளியே பனி விழுந்து கொண்டிருந்ததால், வேறு யாரும் வந்து குறுக்கிடாமலும், தொடர்ந்து ஒரு மணி நேரத்துக்கு மேல் என் மனத்தில் எழும்

ஐயப்பாடுகளைக் கூறவும், அவர் அதை யெல்லாம் வெகுஉன்னிப் பாகக்கேட்டு அறிவு புகட்டவும் பெரு வாய்ப்புக் கிட்டியது. ஒரு கட்டம் வரும்போது அந்த மகான் தனது கையால் ஓங்கி என் முதுகில் ஒரு அடி கொடுத்தார். எதிர்பாராத விதமாக அடி விழவே, நிமிர்ந்து பாபாவின் முகத்தைப் பார்த்தேன். 'சம்சயப் படாதே! அதுதான் அது. தீயைக்காண வேண்டுமானால் விறகில் தான் காணமுடியும். தீயை மட்டும் தனியே எப்படிக் காண் பாய்?'.................... என் மெய் சிலிர்த்தது. அதற்குமேல் என்ன உணர்வு ஏற்பட்டது என இப்போது கூற இயலவில்லை. சிறிது நேரம் மௌனம்.

பின், பேச்சு வேறுவகையில் திரும்பியது. 'உங்கள் பெரிய சுவாமிஜி (ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தி சுவாமிகள்) இது சமயம் வரவில்லையா? அவர்கள் ஆவணி மாதம் வரக்கூடும். தூய்மையான மகாத்மா வாதலால் இச்சமயம் வரவேண்டாம் என்பதே திருவருட் குறிப்பு. மோட்டார் வசதி பெருகிவிட்டதால் பல திறப்பட்ட மக்களும் இங்கு வரத் தலைப்பட்டுவிட்டனர். அதனால் விபரீத பிரகிருதி தோஷமும் காண்கிறது. அதனால் தான் இப்படி பனி விழுகிறது. ஆவணி மாதத்தில் இம்மாதிரிக் கூட்டம் வருவ தில்லை. ஆதலால் பெரிய சுவாமிஜி இனி ஆவணிமாதமே வரு வது நன்றாகும்' எனக் கூறினார். இதற்குள் பனிவிழுவது சிறிது குறைவு படவே, பலர் தரிசனத்துக்கு வரத் துவங்கி விட்டனர். 'சரி நீ போய் இளைப்பாறி விட்டு, கோயில் மாலை தரிசனத்துக்கு வா? இரவில் ஏதாவது அனுபவம் ஏற்பட்டால் நாளை காலை வந்து கூறு' என்று விடை கொடுத்தனுப்பவே நான் ஏதோ கிடைத்தற்கரிய பெறும் பேறு கிட்டியதென்ற உணர்வுடன் நாங்கள் தங்கியிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தேன்.

### திருக்கேதாரநாதர் தரிசனம்.

மாலை தரிசனத்துக்கும் மறு நாள் காலை வழிபாட்டிற்கும் சென்றோம். காலை 8 மணி சுமாருக்கு அபிஷேகம் முதலிய வற்றிற்கு ஏற்பாடு செய்யப் பெற்றிருந்தது. காலையிலும் பனி விழுந்து கொண்டிருந்தது. கீழே கால் ஊன்றி நிற்க இயல வில்லை. ஒரு கம்பளியைப்போட்டு அதன்மேலே நின்றோம்,

அதுவும் போதவில்லை. ஆயினும் இவைகளைச் சிறிதும் பொருட் படுத்தாமல் எங்களுடன் வந்த ஜூனியர் சுவாமிகள் (ஸ்ரீ முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள்)அவர்கள் மிகுந்த பக்தியுடன் ஸ்ரீ விநாயகர், ஸ்ரீகேதாரீசுவரர், கௌரி அம்மன் வழிபாடியற்றி பரவசமானுர்கள். பூஜை முடித்து வெளியே வந்தோம். பிரகாரம் எல்லாம் பனியால் மூடப் பெற்றிருந்ததால் கோயில் வலம் வர இயலவில்லை. நேரே பாபாவைத் தரிசிக்கச் சென்ருேம் — பனிக் குவியலைத் தாண்டிக் கொண்டு.

மீண்டும் பாபா தரிசனம்.

நாங்கள் ஐவரும் பண்டா கணேஷ்சங்கரும் சென்ருேம். எல்லோரையும் உட்காரும்படி பணித்தார். பிறகு ஜூனியர் சுவாமிகளை விசாரித்தார். அவர்களிடம் சில அருள்மொழி களையும் புகன்ருர். யாவருக்கும் பயன்படும் பொருட்டு அதை இங்கே குறிப்பிடுகின்றேன்.

இமயக்குரல்.

பிரம்மத்திலிருந்து இரண்டு பதார்த்தங்கள் சித்திக்கின்றன.

1. நிஷ்காம், 2. ஸகாம்.

1. நிஷ்காம்

இதை நிவர்த்தி மார்க்கம் என்றும் கூறலாம்.

இது மகாத்மா அதாவது சந்யாசிகளுக்கு ஏற்பட்டது.

எல்லாத் தியாகத்தையும் தியாகம் செய்தல். அன்ன வஸ்திரம் தவிர மற்ற எந்த வஸ்துவிலும் ஆசை வைக்கா மலிருத்தல்.

தன்னை ஒரு பால் வைக்கும் கிண்ணமாகப் பாவித்துக் கொண்டு (பாற் கிண்ணம் எத்தனை முறை பால் வைத்தாலும், எவ்வளவு பால் வைத்தாலும் தான் ஒரு சொட்டும் அருந்தாது பிறருக்கே கொடுத்து விடுவது போல) பிரகிருதியினுடைய வஸ்துக்களை அஹந்தா மமதா, கர்த்திருத்வம் முதலிய எவ்வித அபிமானமுமின்றி பிரகிருதியினிடமே அர்ப்பணம் செய்து விடல் வேண்டும்.

ஏனென்ருல் பிரகிருதி சந்யாசிக்கு வேலைக்காரி. பிர கிருதிக்கு அடிமையாகும் சந்யாசி வேலைக்காரிக்கு அடிமை யானவனுவான்.

சந்யாசியிலும் எத்தனையோ விதமானவர்கள் இருக்கின் ருர்கள். எல்லோரையும் ஒரே மாதிரி எண்ணிவிடுவதற் கில்லை.

ஏனெனில் இந்த மனம் ஒரு நொடிப் பொழுதில் அவித்தை யின் வசம் ஆகிவிடக்கூடிய ஆபத்து உளது. ஆதலால் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும். உதாரணமாக – எந்த விஷ்ணுவைக் குறித்து நீண்டகாலம் பிரஹலாதன் தவம் இயற்றிஞரோ அந்த விஷ்ணுவினிடமே (அவித்தை யின் காரணத்தால்) யுத்தம் செய்யத் தயாராகி விட்டா ரென்ருல்?

விவேக விசார்—அதாவது ஆத்மாவினுல் எல்லா வஸ்துக் களையும் பரீக்ஷை செய்யவேண்டும்.

2. ஸகாம்.

இதை பிரவிர்த்தி மார்க்கம் என்றும் கூறலாம்.

இது இல்லறத்தாருக்கு உரியது.

பிரகிருதி நியமத்துக்கு ஏற்ப இவன் நடந்து வந்தால் பிரகிருதி இவனை இகலோகத்தில் பொற்கிண்ணத்தில் பாலுட்டி வளர்ப்பதோடு பரலோக மோக்ஷ முக்தி கிடைப் பதற்கும் வழி செய்யும்.

அந்த பிரகிருதி நியமத்தை கீழே 8 விதிகளில் கூறப் பட்டிருக்கிறது. தவிற முக்கியமாக எந்த காரியம் செய்தாலும் ஆஸக்தியை விட்டு விட்டு காரியம் செய். பிரகிருதியினுடைய காரியங்களை பிரகிருதியிலேயே அர்ப்பணம் செய்து விடு. அதன் பிறகு தியாகத்தால் தி யா க ம் — வைராக்கியத்தால், வைராக்யம்.

1. சத்தியமே பேசுதல்.
2. காலை மாலை பகவத் பக்தி செய்தல்.

3. தன்னுடைய உரிமைகளை விடாமை. பிறர் உரிமைகளில் தலையிடாமை.

4. தன் சக்திக்கு ஏற்ப தானம், தர்மம் செய்தல், புண்ய தீர்த்தங்கட்கு செல்லல். விரதம் அனுஷ்டித்தல். நியமங்களை அனுஷ்டித்தல். அதிதி ஸேவை முதலியன செய்தல்.

5. காலை மாலை ஆத்மாவினுல் மனமாகிய விலங்கை பரிசைஷ செய்தல். இன்று காலையிலிருந்து இதுவரை இந்த மனம் என்னென்ன நன்மை தீமைகளைச் செய்தது?

6. விவேகத்தினுல் நன்கு விசாரணை செய்து வைராக்கியத்தால் எல்லாவித அபிமானங்களையும் நீக்கி சகல காரியங்களையும் செய்துகொண்டிருத்தல்.

7. பிரம்ம ஸத்தியம், ஜகத் மித்தியா, என்ற உணர்வுடன் எப்போதும் இருப்பதுடன், இந்த உடலை விட்டு ஒரு நாள் நாம் அவசியம் நீங்கியேயாக வேண்டும். அப்போது தர்மராஜாவிடத்தில் நாம் செய்த பாப புண்ணிய கணக்கு ஒப்புவிக்க நேரிடும் என்ற நினைவு அகலாதிருத்தல்.

8. பிறர் பொருளை இச்சிப்பவனுக்குக் கண்டிப்பாய் நரகம் கிட்டும். ஆகையால் பிரகிருதியினுடைய வஸ்துவின் பேரில் நீ ஒரு போதும் அபிமானம் வைக்காமலிருத்தல்.

'பெரிய சுவாமிகள் இப்படிப்பட்ட ஸத் சாதுசங்கம் ஏற்பட வேண்டும் என்ற கருணையுடன்தான் என்னை இம்முறை போய் வரும்படி பணித்தார்கள் என நினைக்கிறேன்' என்று கூறி ஜுனியர் சுவாமிகள் பாபாவிடம் விடைபெற்றுக் கொண்டார்கள். நாங்களும் ஒவ்வொருவராக விடைபெற்றுக் கொண்டோம். வாழ்க பாபாஜி. ஜே கேதார்நாத்.

---

சுந்தர மூர்த்தி சுவாமிகளின்

# அற்புதத் திருப்பதிகங்கள்

## Hymns of St. Sundarar

திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள், M. A.,
தமிழ் விரிவுரையாளர்,
காசி இந்துப்பல்கலைக்கழகம், காசி.

---

### Tiruttondattogai.

திருத்தொண்டத்தொகை: பண்: கொல்லிக்கௌவாணம்

பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்க் கடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையர்க் கடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

I am the slave unto the poets of sincere devotion.

I am the servant of Pugazhcchozha Nayanar, who breathed his last at Karuvur.

I serve the true devotee, Narasinga Munaiyaraiyar, and Adibattar of Nagapattinam.

I am the devotee of the servants of the warrior, Kalikkambar, Kaliya Nayanar and Satthi Nayanar of Arinjai.

And the slave of Iyadigal Kadavar Kon am I, the servant of the Lord at Arur.

(To be continued)

# தமிழ் இலக்கியத்தில் பாரத ஒற்றுமைக் கோட்பாடு

திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கள்

வடமொழி, தமிழ் எனும் இரு மொழிகளும் இந்தியாவில் பண்டுதொட்டு இணைந்து வாழ்ந்த வரலாற்றைப் பல இலக்கியங்கள் நமக்கு விளக்குகின்றன. இராமாயணம், பாரதம் முதலிய வட நாட்டுப் பெருங் காப்பியங்களும் தொல்காப்பியம் சங்க இலக்கியம் முதலிய தமிழ்நாட்டு இலக்கண இலக்கிய நூல்களும் இந்நாட்டை இணைத்தே காண்கின்றன—காட்டுகின்றன.

தொல்காப்பியம் இன்றைக்கு மூவாயிரமாண்டுகளுக்கு முந்தியது என்பர். வடநாட்டாருடைய பழக்கவழக்கங்கள் பல தமிழகத்தில் நடைமுறையில் இருந்தமையை அந்நூல் நன்கு காட்டுகிறது. தொல்காப்பியம் வேதகாலத்துக்கு முந்தியதென்றும் அக்காலத்தும் வடக்கும் தெற்கும் இணைந்தே வாழ்ந்தன என்றும் வரலாற்றுளரும் உரையாசிரியரும் காட்டுவர். இன்றைய மொழிஇயல் ஆய்வாளர்கள் பாரதநாடு பழங்காலத்தில் ஒரு மொழியால் இணைக்கப்பெற்றதென்பர். இதைத்தான் சிலப்பதிகாரம் 'குமரியோடு வட இமயத்து ஒருமொழி வைத்துலகாண்ட' என்னும் தொடரால் குறிக்கின்றது எனக்கொள்ள வேண்டியுள்ளது.

புறம் இரண்டாம் பாட்டில் முரஞ்சியூர் முடிநாகராயர் என்பார் பெருஞ்சோற்றுதியன் சேரலாதனைப் பாராட்டுகிறார். இறுதியில் இவனை வாழ்த்தும்பொழுது 'பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்று வாழ்க' என்கின்றார். ஆகவே அப்புலவர் உள்ளத்தில் வடகோடியிலுள்ள பனிமலையும் தென் கோடியிலுள்ள அகத்தியர் வாழும் பொதியமலையும் ஒன்றாகவே காட்சி தருகின்றன. இலக்கண இலக்கியத் தலைவர் அகத்தியர் வரலாறே நாட்டு இணைப்பைக் காட்டுவதுதானே!

---

*இந்த கட்டுரை, சென்னை வானொலி நிலையத்தாரின் அனுமதி பெற்று பிரசுரிக்கப்படுகிறது.*

முடிநாகராயர் இப்பாடல் வழி மற்றோர் இணைப்பையும் காட்டுகிறார். இச்சேரலாதன் பாரதப் போரில் சோறளித்தான் என்கின்றார். இவன் பாரதப்போரில் இருதரத்தாருக்கும் வேறு பாடு இன்றி, வாடுங்காலத்து வலிதிற் சென்று சோறு அளித் தான் எனக் காண்கிறோம். இக்காலத்திய செஞ்சிலுவைச் சங்கத்தின் பணியினை ஒத்து இவன் பணி விளங்கியிருக்கலாம். அருச்சுனன் பாண்டியன் மகளை மணந்தான் என்று இலக்கிய மரபும் உண்டு. எனவே, பாரத காலத்திலேயே வடக்கும் தெற்கும் இணைந்தமை நன்கு புலப்படும்.

சேரன் செங்குட்டுவன் இமயம் வரையில் சென்றதைச் சிலப்பதிகார வஞ்சிக்காண்டம் நன்கு விளக்குகின்றது. அவன் நண்பனாகிய, கங்கைக் கரையில் வாழ்ந்த, 'சதகர்னி' (நூற்றுவர் கன்னர்) என்னும் மன்னர் செங்குட்டுவன் கங்கையைக் கடப் பதற்கும் வேறு வகையிலும் உதவி செய்துள்ளார். கனகவிசயர் என்ற உத்தர பிரதேசத்தைச் சேர்ந்த வடநாட்டு மன்னர் முத லில் மாறுபட்டவராக இருந்தும் கண்ணகி விழாவில் நட்பின ராகவே காட்சி தருகின்றனர். பாண்டியன் நெடுஞ்செழியனும் இமயம் வரை சென்று 'ஆரியப் படை கடந்த நெடுஞ்செழிய' எனப் போற்றப்பட்டான். இவர்கள் வெறும் மண்ணாசையால் வடக்கு நோக்கிச் சென்றவரல்லர். இமயமும் கங்கையும் அவர்களுக்கு உயர்ந்த தெய்வ நிலைக்களங்களாக இருந்தன. இமயக் கல்லும் கங்கை நீருமே தமிழகத் தெய்வத்தை வாழ வைத்தன. இவ்வாறு சங்க காலத்திலும் அதற்கு முன்பும் பரந்த பாரதம் இணைந்தே வாழ்ந்தமைக்குச் சான்றுகள் எண் ணற்றனவாம்.

சிலம்பிற்குப் பின் வந்த மணிமேகலை, சீவக சிந்தாமணி முதலிய பெருங்காப்பியங்களும் வடக்கும் தெற்கும் இணைந்த வரலாற்றை, காய சண்டிகை போன்றார் வரலாற்று வழியும், சீவகன் பிறநாட்டு மக்களுடன் பழகி மணங்கொண்ட வழியும் காட்டுகின்றன. சேக்கிழார் பெரியபுராணமும் கம்பரது இராமா யணமும் வடநாட்டுத் தென்னாட்டுப் பெருவழிகளை நன்கு விளக்குகின்றன. சங்ககால இலக்கியங்களுள் சில, வடநாட்டு இராமாயண பாரதக் கதைகளில் காணமுடியாத சில உண்மை களை நமக்குத் தருகின்றன,

இராமன் சேதுவில் அணைகட்டு முன் ஆலமரத்தடியி லிருந்து ஆராய்ந்தான் என அகநானூறு குறிக்கின்றது. இரா வணனால் கொண்டு செல்லப்பட்ட சிதை முடிந்து இட்ட அணி கலங்களை மாறி மாறி அணிந்த குரங்குகளைப் புறம் காட்டு கின்றது. கைலை மலையைத் தூக்கமுடியாது உழன்ற இராவண னைக் கலித்தொகை காட்டுகிறது. பாரதப் போரில் சேரன் சோறளித்ததை முன்பே கண்டோம். இவ்வாறு பல இலக்கி யங்கள் வடக்கும் தெற்கும் இணைந்ததைக் காட்டுகின்றன.

கடவுள் நெறி பற்றிய இலக்கியங்களிலும் நாடும் மொழியும் இணைந்தே காட்டப்பெறுகின்றன. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பர், ஆண்டவனை, 'ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்' என்றும், 'ஆரியமும் தீந்தமிழும் ஆயினான் காண்' என்றும் பாடியுள்ளார். கடவுளர்தம் உரு, நிறம் ஆகிய அமைப்புக்களி லும் வேற்றுமைக்கிடையில் ஒருமையினையும் ஒற்றுமையினையும் இலக்கியங்கள் காட்டுகின்றன. கலித்தொகை சிலப்பதிகாரம் முதலிய நூல்கள் இவ்வுண்மையை நன்கு நிலைநாட்டுகின்றன.

மிகப் பழங்காலத்திலேயே தமிழ் நாட்டிற்கு வந்து தமிழ் மொழி பயின்று தமிழரொடு கலந்து தமிழ்ப் பாட்டிசைத்த ஆரிய மன்னரும் உள்ளனர். இவருள் சிறந்தவர் யாழ்ப்பிரம தத்தர், தமிழ் நாட்டு இசைக் கருவிகளுள் சிறந்த யாழில் வல்ல வராக இருந்ததோடு இவர் பாடியதாகவே சங்கப் பாடலும் உள்ளது. மற்றொரு அரிய அரசனான பிரகதத்தனுக்குத் தமிழ் வளம் காட்டுவதற்காகவே கபிலர் குறிஞ்சிப் பாட்டைப் பாடினார். இவ்வாறே பல தென்னாட்டு அறிஞர், வடநாட்டு இலக்கிய வானில் ஒளிவிட்டனர். நாலந்தா பல்கலைக் கழகத்தே தென் னாட்டுக் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த நல்ல புலவர்கள் இருந்ததை அறிகிறோமன்றோ!

சமயத்துறையில் அப்பர் காட்டிய இணைப்பினைக் கண் டோம். அவர் இமயம் வரையில் சென்றவர். ஆங்குள்ள கோயில்களையும் பாடியவர். அவருக்கு முன்பும் கங்கையாடிக் கயிலை காணச் சென்றவர் பலர். மாடல மறையோன், பாவம் நீங்கக் கங்கையாடச் சென்றதைச் சிலப்பதிகாரம் காட்டுகிறது. தென்னாட்டு ஆண்டாளும் வடநாட்டு மீராவும் இணைத்துப் பேசப்பெறுகின்றனர். சில நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த

குமரகுருபரர் காசிக்குச் சென்று இந்துஸ்தானி பயின்று, ஆங் கிருந்த சுல்தானிடம் பாட்டிசைத்து இடம் பெற்று மடம் அமைத்தார். இது இன்றும் சிறக்க உள்ளது. அவர் பாடல் களில் 'சலாம்' 'சபாஷ்' முதலிய சொற்கள் இடம் பெற்றுள்ளன. தென்னுட்டுச் சங்கரர் காஷ்மீர் வரையிலும் சென்று ஸ்ரீநகரில் ஒரு கோயிலையும் சமைத்தார். அண்மையில் வாழ்ந்த வடநாட்டு விவேகானந்தரும் அரவிந்தரும் தமிழரொடு இணைந்து தத்தம் கொள்கையைப் பரப்பினர். இவர்தம் இலக்கியங்கள் அனைத் தும் நாட்டு ஒருமைப்பாட்டையே உணர்த்துகின்றன.

இந்த நூற்றுண்டில் வாழ்ந்த பாரதியாரும் அவரடி போற்றி எழுந்த பல நேற்றைய இன்றைய கவிஞர்களும் தத்தம் எழுத்துக்களில் கவிதையாயினும் காவியமாயினும் நாவலாயினும் நாடகமாயினும் சிறுகதையாயினும் கட்டுரையா யினும் இந்த இணைப்பு நிலையை வலியுறுத்தியே வருகிருர்கள். இந்தியா விடுதலைபெற விழைந்து பாடிய கவிஞர் பலர்-அவருள் பாரதி தலையாயவர். அவர் ஒன்றிய இந்தியாவைக் கண்டார். 'செப்புமொழி பதினெட்டுடையாள்—எனில் சிந்தனை ஒன்றுடை யாள்' என்று ஒருமை உணர்வைக் காட்டினுர். அடிமை வாழ்வை நீக்க முனைந்த கவிஞருள் அவரினும் மிக்கவர் இருந் தனரா என எண்ண வேண்டியுள்ளது. அவருக்கு இமயமும் பொதிகையும் ஒன்றே—கங்கையும் காவிரியும் கலந்தனவே. வங்கமும் கேரளமும் ஒன்றே. அவர் இணைப்பு, தமிழனைச் சிந்து நதியின் வெள்ளத்தின் மேல் சேரநாட்டு மகளோடு தெலுங்கில் பாட்டிசைத்துப் படகோட்டி,மகிழவைத்தது. தாயின் மணிக்கொடி யின் நிழலில் தமிழரும் தெலுங்கரும் மராட்டியரும் ரஜபுத்திர ரும் வங்கரும் பாஞ்சாலரும் உத்தர நாட்டாரும் ஒன்றிக் கண்ட காட்சி அவருடையது. 'எங்கள் தாய்' என்று எண்ணிப் பாடிய அவர் உள்ளத்து அவள் 'முப்பது கோடி முகமுடைய' ஒருத்தி யாக நின்றுள். வெள்ளிப்பனி மலையும் சேதுவும் அவருக்கு ஒன்றே. இந்திய மக்கள் அனைவரும் 'சண்டை செய்தாலும் சகோதரரே.' பாரதியின் உள்ளத்தில் ஒருமை உணர்வு அன்றி வேறே உதித்திருக்க வழியேது?

உரைநடையின் நலம் கண்ட பேரறிஞர் அண்மையில் மறைந்த திரு. வி. க. அவர் இந்திய அன்னையை எண்ணி

உருகியவர், விடுதலைப் போராட்ட வீரர். பாரதத்தின் ஒருமைப் பாட்டை எண்ணி எண்ணிப் பல இலக்கியங்கள் வடித்தவர். மக்களும் சமயங்களும் சாதிகளும் கட்சிகளும் கலந்த இந்திய ஒருமைப்பாட்டை விரும்பினர் அவர். 'நாட்டுத் தொண்டிலே ஈடுபட்டுத் தேசத்திலே ஒற்றுமையையும் தேசாபிமானத்தையும்' வளர்க்குமாறு மக்களைக் கேட்டுக்கொண்டார் அவர். அவர் தம் இலக்கியங்கள் பாட்டும் உரையும்—அனைத்தும் ஒன்றிய இந்திய வாழ்வையே உணர்த்துவன.

பாரத நாட்டு விடுதலைக்கு முன்னும் பின்னும் எழுந்த நாவல்கள், சிறு கதைகள், கவிதைகள், நாடக உரைநடை நூல்கள் சிலவற்றில் இந்திய ஒருமைப்பாடு மணியிடை போல் உள்ளது. 'கல்கி' முதலியோர் தம் பெருநாவல்களிலும் 'புது மைப்பித்தன்' முதலியோர் தம் கதைகளிலும் பிற எழுத்தாளர் தம் இலக்கியங்களிலும் இமயம் முதல் குமரி வரை இன்றைய சிறுகதைகளில் பல, சீன பாக்கிஸ்தான் போர்க்களங்களைப் பின் னணியாகக் கொண்டுள்ளன. ஒற்றுமையை வலியுறுத்தி இந்தி நாவல்களிலும் பிற நூல்களும் தமிழில் மொழிபெயர்க்கப்பெற் றுள்ளன. அவ்வாறே பிறமொழி நூல்களும் நாட்டு மற்றைய மொழிகளில் மொழிபெயர்க்கப்பெற்றிருக்கும். நல்ல இலக்கி யங்களை இந்திய நாட்டு எல்லா மொழிகளிலும் கொண்டுவர முயலும் அரசாங்கத்தின் தொண்டு போற்றற்குரியது.

'உரிமை பெற்றபின் உண்டான பல சிக்கல்களால் நாட்டு ஒற்றுமை குலைந்துவிட்டது' என எண்ணியவருக்கு, சீன தாக்கு தலும் பாக்கிஸ்தான் மாறுபாடும் உண்மையை உணர்த்திவிட் டன. 'ஆயிரமுண்டிங்கு சாதி—எனில் அன்னியர் வந்துபுகல் என்ன நீதி?' என்ற பாரதியின் வாக்குப்படி ஒவ்வொரு இந்திய னும் வினை எழுப்பி விறுகொண்டெழுந்து ஒன்றி இணைந்தமை கண்கூடு.

இவ்வாறு தமிழ் இலக்கியங்கள் தோன்றிய நாள்தொட்டு— மூவாயிரமாண்டுகளுக்கு முன்பிருந்து இன்று வரை—இமயம் முதல் குமரி வரை ஒன்றிய இணைப்பினையும் அதன்வழி உரு வாகும் பண்பாடு, நாகரிகம் சமயநெறி முதலியவை பற்றிய நலன்களையுமே காட்டி, நாடும் உலகமும் நலம் பெற்று உயர் வுற்று வாழ வழிகாட்டுகின்றன.

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 17, இதழ் 6-ன் தொடர்ச்சி]

## III

## SUNDARAMURTI SWAMI

(Abbreviated as SUNDARAR)

70. நாயேன்பலநாளுநினைப்பின்றிமனத்துன்னைப்
பேயாய்த்திரிந்தெய்த்தேன்பெறலாகாவருள்பெற்றேன்
வேயார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாயாவுனக்காளாயினியல்லேனெனலாமே.

70. I roamed, a cur, for many days
      Without a single thought of Thee,
   Roamed and grew weary, then such grace
      As none could win Thou gavest me.
   Venney-nallur, in "Grace's shrine"
      Where bamboos fringe the Pennai, there
   My Shepherd, I became all thine;
      How could I now myself forswear ?

(To be continued)

---

உ

சிவ சிவ

# திருமாகறலில் மகாசிவராத்திரிக் கட்டளை

## முதற்பொருள் ரூ. 1000/-

திருமாலும் பிரமனும் அடிமுடி தேடிய காலத்துச் சிவ பெருமான் அனற்பிழம்பாய் நின்றமையின் அவ்வொளி சிறந்த இரவே சிவராத்திரி என்றும், பேருழிக்காலம் வர யாவும் ஒடுங்க உயிர்கள் மாட்டுக் கருணைபூண்டு உமாதேவியார் நான்கு யாமங்களும் சிவலிங்க பூசனை செய்ய, இரண்டாம் யாமத்தில் வெளிப்பட்ட சிவபெருமான் திருவுள்ளப் பாங்கின் வண்ணம் உமாதேவியார் வரம்வேண்ட அவ்வரத்தின்படி அம்மை நோற்ற அவ்விரவே சிவராத்திரி எனப்பெற்றது என் றும் பேசப்பெறும் வரலாற்றையுடையது சிவராத்திரி.

ஒவ்வொரு மாதத்திலேயும் வரும் வளர்பிறை தேய்பிறை சதுர்த்தசி நாட்களாகிய நித்திய சிவராத்திரி–மாத சிவராத்திரி – சோமவாரம் சூர்யோதயம் முதல் 10 நாழிகை வரை அமா வாசையுள்ள யோக சிவராத்திரி – தை மாதம் தேய்பிறை பிரதமை முதல் 13 நாட்கள் விரதம் இருந்து 14-ம் நாள் விரதம் பூர்த்தி செய்யும் பட்ச சிவராத்திரி – மாசி மாதத்தில் வரும் மகாசிவராத்திரி என இச்சிவராத்திரி ஐந்து வகைப்படும்.

மகாசிவராத்திரி நாளில் சிவபூசையுடையவர்கள் நான்கு காலங்களிலேயும் சிவபூசை செய்வர். சிவபூசை ஏற்றுக்கொள் ளாதவர் சிவாலயத்திற்குச் சென்று நான்கு கால பூசைகளையும் ஊன் உறக்கமின்றித் தரிசிப்பர். நான்கு சாமங்களிலும் சிவ லிங்க தரிசனம் செய்ய இயலாதவர்கள் இரண்டாம் சாமத்தி லேனும் சிவதரிசனம் செய்தல் வேண்டும். இங்ஙனம் சிவ ராத்திரி விரதம் அனுஷ்டிப்பவர் சிவசாயுச்சியத்தைப் பெறுவர்.

இவ்வாறு சிறப்பிக்கப்பெறும் மேன்மை பொருந்திய மகா சிவராத்திரி நாளில் இரண்டாம் யாமத்தில் தொண்டைநன்னாட் டுப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்றாகிய திருமாகறல் என்னும்

தலத்தில் திருமாகறலீசுவரருக்கும் திருபுவனநாயகி அம்பாளுக்கும் விசேஷ அபிஷேக நைவேத்தியங்கள் செய்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இந்நிதி நிறுவப்பெற்றது. இது "திருமாகறலில் மகாசிவராத்திரிக் கட்டளை" எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 1000/- ரூபா ஓராயிரம். இது ஆண்டொன்றுக்கு 7½% வட்டி தரக்கூடிய நிலையான முதலீடாகக் கும்பகோணம் கானரா பாங்கில் முதலீடு செய்யப் பெற்றுள்ளது. எண். 489028 – 4—6—66 – 120 மாதங்கள் ரூ. 1000/- இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப்பெற்று வரும்.

3. திரைலோக்கிய சுந்தரம் மகாசிவராத்திரி நிதி ரூ. 1000

திருவாப்பாடியில் சிவராத்திரிக் கட்டளை ரூ. 1000

திருக்கோவலூர் வீரட்டேசுவரர் மகாசிவராத்திரிக் கட்டளை ரூ. 1000

திருவதிகை வீரட்டேசுவரர் மகாசிவராத்திரிக் கட்டளை ரூ. 1000

திருவெண்ணெய்நல்லூரில் மகாசிவராத்திரிக் கட்டளை ரூ. 1000

சாயாவனேசுவரர் மகாசிவராத்திரிக் கட்டளை நிதி ரூ. 1500

திருப்பாதிரிப்புலியூரில் ஸ்ரீ பாடலேசுவரர் மகாசிவராத்திரிக் கட்டளை ரூ. 1000

ஆகிய ஏழு நிதிகள் இதுகாறும் நம்மால் மகாசிவராத்திரிக் கட்டளைகளாக நிறுவப்பெற்றுள்ளன. அங்ஙனமே நிறுவப் பெற்றுள்ள இம்முதற்பொருளினின்று கிடைக்கும் வட்டித் தொகை முழுதும், தொண்டைநாட்டுப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்ருகிய திருமாகறல் என்னும் தலத்தில் திருமாகறலீசுவரருக்கும் அம்பாளுக்கும் மகாசிவராத்திரி நாளில் நான்கு யாமங்களில் ஒரு காலத்தில் விசேஷ அபிஷேக நைவேத்தியங்கள் நடத்துவிக்கப் பயன்படுத்தப்பெறும்.

4. இவ்வட்டி வருமானம் வேறு எம்முறையிலும் பயன் படுத்தப்பெறமாட்டாது.

5. இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமை யுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும். இம்முதற்பொருள் திரும் பப்பெற்றதும் அதிக வட்டி தரக்கூடிய முதலீடுகளில் முதலீடு செய்யப்பெறும்.

Tirupanandal
Dated 7-6-1966. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

---

*திருவிடைமருதூர் சப்-ரிஜிஸ்டிரார் ஆபிஸில் 4-ம் புத்தகம், 53-வது வால்யூம், 153 முதல் 155 வரை பக்கங்களில் 1966-ம் வருஷத்திய 28-வது நம்பராக ரிஜிஸ்தர் செய்யப்பட்டது. 1966-ம் வருஷம் ஜூன் மாதம் 8-ம் தேதி.*

---

## "திருச்செந்தூர் முருகா!"

### மதுரைபதி.

இராகம்: இந்தோளம். தாளம்: ஆதி

எடுப்பு

அலைகடல் மேவும் கலைக்கோயில் தன்னில்
அருளோடு அருளும் திருச்செந்தூர் முருகா! (அலைகடல்)

தொடுப்பு

நிலையிலா வாழ்வில் நித்தமும் உழலாமல்
அழகோடு உனைப்பாட அமுதருள் தருவாயே! (அலைகடல்)

முடிப்பு

இலைவிபூதி தினம் இன்பமாய் அணிவோர்க்கு
அலையலையாய் வரும் அல்லல்கள் அகற்றிடும்
அறிவுக்கன்பனே! ஆறுமுக வேலவனே!!
பரிவோடு எமைக்காக்க மயிலேறி வருவாயே!!! (அலைகடல்)

திருப்பனந்தாள் – ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'

| எண் | நூல் | | ரூ. | பை |
|---|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) | ... | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம் மட்டும் புதிய பதிப்பு) | ... | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, | ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ,, | ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் ,, | ... | 0 | 56 |
| 8* | திருக்கோவையார்–பேராசிரியர் உரையும் பழைய உரையும் (புதிய பதிப்பு) | ... | 2 | 90 |
| 9* | ஒன்பதாம் திருமுறை–திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் தெளிவுரை | ... | 1 | 50 |
| 10 | ,, ,, மூலம் மட்டும் | ... | 0 | 56 |
| 11* | திருமந்திரம் (புதிய பதிப்பு) ,, | ... | 2 | 25 |
| 12* | பதினோராந்திருமுறை (புதிய பதிப்பு) ,, | ... | 1 | 50 |
| 13* | பெரியபுராணம் (மூலம்மட்டும்) | ... | 3 | 00 |
| 14 | பெரியபுராணம் உரை நடை | ... | 2 | 00 |
| 15 | திருத்தொண்டர் புராண சாரம் | ... | 0 | 40 |
| 16* | அகத்தியர் தேவாரத் திரட்டு | ... | 0 | 36 |
| 17 | திருவிளையாடற் புராணம் மூலம் மட்டும் | ... | 3 | 00 |
| 18 | திருவிளையாடற் புராணம் உரை நடை | ... | 2 | 25 |
| 19 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) | ... | 1 | 75 |
| 20 | கந்த புராணம் – முதல் மூன்று காண்டங்கள் மூலம் மட்டும் | ... | 2 | 75 |
| 21 | ,, யுத்த தேவ காண்டம் ,, | ... | 2 | 00 |
| 22 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 | 50 |
| 23 | கந்தபுராண உரைநடை ,, | ... | 3 | 00 |
| 24 | திருக்குறள்-அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 | 50 |
| 25 | திருக்குறள்-பொருட்பால் ,, | ... | 2 | 50 |
| 26 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | | | |
| | ஷை 24, 25, 26. திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 | 00 |
| 27 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் (அச்சில்) | ... | 0 | 75 |
| 28 | தாயுமான சுவாமிகள் பாடல் குறிப்புரை | ... | 1 | 25 |
| 29 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 | 25 |
| 30 | திருக்கைலாய ஞானவுலா– உரையுடன் | ... | 0 | 50 |
| 31 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் | ... | 0 | 25 |
| 32 | கந்தரனுபூதி மூலம் (அச்சில்) | ... | 0 | 13 |
| 33 | கந்தரனுபூதி தெளிவுரை | ... | 0 | 35 |
| 34 | கந்தர்கலி வெண்பா - ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புகளுடன் (அச்சில்) | ... | 0 | 37 |
| 35 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் | ... | 0 | 10 |
| 36 | கந்தர்கலி வெண்பா மூலமும் உரையும் (அச்சில்) | ... | 0 | 37 |
| 37 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலமும் ஹிந்தியும் | ... | 0 | 50 |
| 38 | சகலகலாவல்லிமாலை ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 | 60 |

Registered with the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.



| | | |
|---|---|---|
| 39 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) ... | 0 75 |
| 40 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் ... | 0 37 |
| 41 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 !3 |
| 42 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக் கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை-மதுரை மீனாட்சியம்மை குறம் ... | 2 75 |
| 43 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | 1 25 |
| 44 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச் செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை ... | 1 00 |
| 45 | பண்டார மும்மணிக் கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை ... | 1 00 |
| 46 | சிதம்பரச் செய்யுட்கோவை ... | 0 75 |
| 47 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ... | 0 50 |
| 48 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் ... | 0 25 |
| 49 | திருக்கயிலைத் திருமுறை ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை ... | 0 15 |
| 52 | திருக்குறள்-உரைக்கொத்து-அறத்துப்பால் 3-ம் பதிப்பு ... | 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு ... | 2 75 |
| 54 | ஷை ஷை காமத்துப்பால் ஷை ... | 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி-தெளிவுரையுடன் (அச்சில்) ... | 0 50 |
| 56 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் (குறிப்புரையுடன்) | (அச்சில்) |
| 57 | திருவாரூர்-திருப்பறுவல்கள் ... | 0 10 |
| 58 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி ... | 0 10 |
| 59 | பழமொழித்திருமுறை ... | 0 25 |
| 60 | திருவாரூர் நான்மணிமாலை ... | 0 50 |
| 61 | Hymns and Proverbs ... | 0 30 |
| 62 | அப்பர்விழா வெளியீடு ... | 0 25 |
| 63 | நவக்கிரகமாண்பு ... | 0 25 |
| 64 | குமரகுருபரர் வரலாறும். அற்புதத்தேவாரத் திரட்டும் ... | 0 30 |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.
   "தியாகராஜ விலாசம்" 53. பிள்ளையார் கோயில்தெரு.
   திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு:- • இக்குறிப்பிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.